ஸ்ரீ:

கம்ப ராமாயணம்

# பால காண்டம்

(முதல் ஏழு படலங்கள் பாட பேதங்களுடன்)

சென்னைப் பல்கலைக் கழகத்துத்
தமிழாராய்ச்சித்துறைத் தலைவர்
S. வையாபுரிப்பிள்ளை யவர்களாலும்,
சென்னை அட்வொகேட்
P. N. அப்புஸ்வாமி அய்யரவர்களாலும்
பரிசோதிக்கப்பட்டது.




ஆழ்வார்திருநகரி
பெரியன்: வெ. நா. ஸ்ரீநிவாஸ அய்யங்கார்
பிரசுரித்தது.

காபிரைட்] 1937 [விலை அணா 10

# முன்னுரை

சில வருடங்களாக நாங்கள் இராமாயணப் பிரதிகளைப் பரிசோதித்துப் பாடபேதங்களைக் குறித்துக்கொண்டு ஆராய்ச்சி செய்து வந்தோம். இவ்வாராய்ச்சியைக் கண்ட ஆழ்வார்திருநகரி பெரியன் வெ. நா. ஸ்ரீநிவாஸ அய்யங்காரவர்கள் பாடபேதங்கள் குறிப்புரை முதலியவற்றுடன் இராமாயணப் பதிப்பொன்று வெளியிடுதல் நலமெனக் கூறி, அப்பதிப்பினை வெளியிடும் பொறுப்பைத் தாம் வகித்துக் கொள்வதாக ஒப்புக்கொண்டு எங்களுக்கு மிக்க ஊக்கமளித்தார்கள். முதலாவதாகப் பால காண்டத்தைப் பதிப்பிடுதற்குத் தக்கபடி மூல பாடத்தையும் பாட பேதங்களையும் தயார்செய்யலாயினோம். செந்தமிழ்ச் செல்வர் ஸ்ரீ. மு. இராகவையங்காரவர்களும் ஏகதேசமாக உதவிபுரிந்து வந்தார்கள்.

ஆனால் பல தொழில்களுக்கிடையே இப்பதிப்பு நடைபெற வேண்டுவதாயிருந்ததால், விரைவாக அச்சிட முடியவில்லை. சில வசதிக் குறைவால் அச்சுவேலையே நடவாதபடி தடைப்பட்டிருந்தது. அன்றியும், பாட பேதங்களைக் குறித்தும், ஆராய்ச்சி செய்தும், பாடங்களை வரையறை செய்தும் இராமாயணப் பதிப்பொன்று வெளியிட வேண்டும் பொறுப்பு பல்கலைக் கழகத்துத் தமிழாராய்ச்சித் துறையினரே மேற்கொள்ளத்தக்க தென்னுங் கருத்துடையோம். இவ்வகைப் பதிப்பு வெளி வருதற்கான முயற்சியும் நடைபெற்று வருகின்றது. இந்நிலையில் இதுவரை அச்சிட்டதனையேனும் புத்தக ரூபமாக வெளியிட வேண்டுமென்று பெரியன் வெ. நா. ஸ்ரீநிவாஸ அய்யங்காரவர்கள் வற்புறுத்தினார்கள். அவர்கள் விருப்பத்திற்கு இணங்க, இப்பகுதி இப்பொழுது வெளியிடப் படுகின்றது.

இப்பதிப்பில் நூதன முறைகள் சில கையாளப்பட்டுள்ளன:

1. பால காண்டத்தின் ஆரம்பத்தில் நூற்குப் புறம்பாகக் காணப்படும் தனியன் முதலிய செய்யுட்கள் ஒருமுறை தழுவாது முன் பின்னாகப் பிரதிகளிற் காணப்பட்டன. அவற்றை ஒருமுறைப் படுத்து இப்பதிப்பில் தந்துள்ளமை காணலாம்.

2. படலச் செய்யுளின் எண் செய்யுளின்தொடக்கத்தில் தமிழினும், நூற்செய்யுளின் தொடர்ந்த எண் செய்யுளினிறுதியில் ஆங்கிலத்திலும் தரப்பட்டுள்ளன.

3. அடிக்குறிப்பில் இருதலைப் பகரக்குறியுள் [ ] காணப்படும் தமிழ் எண் படலச்செய்யுளின் எண்ணைக் குறிப்பது.

4. இத்தமிழ் எண்ணை யடுத்துள்ள ஒற்றை யுடுக்குறி அச்செய்யுள் ஒன்றிரண்டு பிரதிகளிற் காணப்பெறவில்லை யென்பதனையும், இரட்டை யுடுக்குறிகள் அது பல பிரதிகளிற் காணப்பெறவில்லை யென்பதனையும் குறிப்பன.

5. அடிக் குறிப்பிற் பாடபேதங்களுக்கு முன்னுள்ள எண்கள் செய்யுளின் சீர்களைக் குறிப்பன. சீரொன்றற்கே பல பாடங்களிருப்பின், அவற்றைக் கோலன் ( : ) அடையாளமிட்டுப் பிரித்துக் காட்டியிருக்கிறது.

6. நூலகத்துக்குச் சேர்க்குந் தகுதியற்ற மிகைச் செய்யுளை எச்செய்யுளின் பின் அது காணப்படுகிறதோ அச்செய்யுட்குரிய ஆங்கிலத் தொடரெண்ணோடு (a) முதலியவற்றைச் சேர்த்து அடிக்குறிப்பிலே கொடுக்கப்பட்டுள்ளது.

7. செய்யுட் கிரமத்திலுள்ள வேறுபாடும், படலக் கிரமத்திலுள்ள வேறுபாடும் பிறவும் உரிய விடங்களில் அடிக்குறிப்பிற் காட்டப்பட்டுள்ளன.

பாடபேதங்களாகத் தரப்பட்டுள்ளனவற்றிற் பல பாடமாகவே கொள்ளத்தக்கனவா யிருக்கும். எழுத்துப் பிழைகளென்று எளிதிலறியக் கூடியனவற்றையும், உண்மையான பாடங்களை அறுதியிடுதற்கு உதவுமாகலின், பாட பேதங்களாகவே காட்டியிருக்கின்றது.

உலக மகா கவிகளுள் ஒருவரெனப் போற்றத்தகும் கம்ப நாடரது செய்யுட்களின் உண்மைப் பாடங்களை வரையறை செய்வதில் எத்துணை இடர்ப்பாடுகள் உள்ளனவென்பதை இப்பதிப்பு விசதமாக்க வல்லது.

பல பிரதிகளை ஒப்பிட்டுப் பெற்ற பாடபேதங்களுடன் பதிப்புக்கள் வெளிவர வேண்டுவது இன்றியமையாதது. இங்ஙனமே ஒவ்வொரு பிரதேசத்திலும் வழங்கி வந்த பிரதியின் படியே வெளியிடும் பதிப்புக்களும் அவசியமாக வேண்டற்பாலனவாம். இவ்விரண்டு வகைப் பதிப்புக்களும், நூற்பாடங்களையும் பாட பேதங்களையும் பல முறை ஆராய்ச்சி செய்து உண்மைப் பாடங்காணுதற்கு இன்றியமையாக் கருவிகளாம். இதனை யுணர்ந்து, ஆழ்வார் திருநகரிப் பிரதேசத்தில் வழங்கி வந்த பிரதியின்படி ஒரு பதிப்பு வெளிவருதற்கு அன்பர் பெரியன் வெ. நா. ஸ்ரீநிவாஸ அய்யங்காரவர்கள் பெரிதும் முயன்று வருகிறார்கள். இப்பதிப்பினைத் தமிழுலகு ஆவலுடன் எதிர்பார்த்திருக்கின்றது.

இப்பதிப்பின் பொருட்டுப் பிரதிகளுதவி யுபகரித்த அன்பர்கள் அனைவர்க்கும் எங்கள் நன்றி யுரித்தாகின்றது. இதனை வெளியிடும் பொறுப்பை மகிழ்ச்சியோடும் உத்ஸாகத்தோடும் ஏற்றுக்கொண்ட தமிழன்பர் பெரியன் வெ. நா. ஸ்ரீநிவாஸ அய்யங்காரவர்களது பேருபகாரத்தினைத் தமிழுலகம் நன்கு பாராட்டுமென்னும் உறுதியுடையோம்.

சென்னை,
22-2-'37.

S. வையாபுரிப் பிள்ளை.
P. N. அப்புஸ்வாமி அய்யர்.

ஸ்ரீ:

# கம்ப ராமாயணம்

## காப்பு

### கடவுள் வணக்கம்

க. ஒன்றா யிரண்டு சுடராயொரு மூன்று மாகிப்
பொன்றாத வேத மொருநான்கொடைம் பூத மாகி
அன்றாகி யண்டத் தகத்தாகியப் புறத்து மாகி
நின்றா னொருவ னவனீள்கழ னெஞ்சில் வைப்பாம்.

### இராமபிரான்

உ. நன்மையுஞ் செல்வமு நாளு நல்குமே
தின்மையும் பாவமுஞ் சிதைந்து தேயுமே
சென்மமு மரணமு மின்றித் தீருமே
இம்மையே ராமவென் றிரண்டெ ழுத்தினால்.

ங. ஓராயிர மகம்புரி பயனை யுய்க்குமே
நராதிபர் செல்வமும் புகழு நல்குமே
விராயெணும் பவங்களை வேர றுக்குமே
இராமவென் றொருமொழி யியம்புங் காலையே.

### இலக்குமி

ச. மாதுளங் கனியைச் சோதி வயங்கிரு நிதியை வாசத்
தாதுகு நறுமென் செய்ய தாமரைத் துணைமென் போதை
மோதுபாற் கடலின் முன்னாள் முளைத்தநாற் கரத்தி லேந்தும்
போதுதா யாகத் தோன்றும் பொன்னடி போற்றி செய்வாம்.

### இராமசரிதம்

ரு. பராவரு மிராமன் மாதோ டிளவல்பின் படரக் கான்போய்
விராதனைக் கரனை மானைக் கவந்தனை வென்றி கொண்டு
மராமரம் வாலி மார்பு துளைத்தனை வகுத்துப் பின்னும்
இராவணன் குலமும் பொன்ற வெய்துட னயோத்தி வந்தான்.

[க - ச * * ] [உ] 7 - 8 தேய்ந்து தீருமே. 8 தியுமே. 12 (ச்) செய்யுமே. 13 இம்மையில். [ரு * ] 14 - 18 எழும் வாலி மார்பமுந் துளைத்துப் பின்னர். 15 மார்புந்.

### கலைமகள்

௬. பொத்தகம் படிக மாலை குண்டிகை பொருள்சேர் ஞான
வித்தகந் தரித்த செங்கை விமலையை யமலை தன்னை
மொய்த்தகொந் தளக பார முகிழ்முலைத் தவள மேனி
மைத்தகு கருங்கட் செவ்வா யணங்கினை வணங்கல் செய்வாம்.

### ஆஞ்சனேயர்

௭. அஞ்சிலே யொன்று பெற்றா னஞ்சிலே யொன்றைத் தாவி
அஞ்சிலே யொன்றா றாக வாரியற் காக வேகி
அஞ்சிலே யொன்று பெற்ற வணங்கைக்கண் டயலா ரூரில்
அஞ்சிலேயொன்றைவைத்தானவனெம்மையளித்துக்காப்பான்.

### நம்மாழ்வார்

௮. தருகை நீண்ட தயரதன் றான்றரும்
இருகை வேழத் திராகவன் றன்கதை
திருகை வேலைத் தரைமிசைச் செப்பிடக்
குருகை நாதன் குரைகழல் காப்பதே.

### விநாயகர்

௯. தழைசெவிச் சிறுகட் டாழ்கைத் தந்தசிந் தூரமுந் தாரை
மழைமதத் தறுகட் சித்ர வாரண முகத்து வாழ்வை
இழையிடைக் கலசக் கொங்கை யிமகிரி மடந்தை யீன்ற
குழவியைத் தொழுவ னன்பாற் குறைவற நிறைக வென்றே.

## தனியன்

### ஆக்கியோன்

௧௦. நாரணன் விளையாட் டெல்லா நாரத முனிவன் கூற
ஆரணக் கவிதை செய்தா னறிந்துவான் மீகி யென்பான்
சீரணி சோழ நாட்டுத் திருவழுந் தூரு வச்சன்
காரணி கொடையான் கம்பன் றமிழினாற் கவிசெய் தானே.

[௬ *] 2 படிகை. 5 பொருளே: புகழ்சேர். 8 தெரித்த. [௭ *] 10-11 வாருயிர் காக்க. 20 யொன்று. 22 னவனம்மை: னவனென்மை. 23-24 யளித்துவைப்பான்: யளித்துகப்பான். [௮ * *] [௯ * *] 21 (ன்)பார்மேற். 23 விழைக்க. [௧௦ *] 6 சொல்ல: செப்ப. 8 கவிகள். 10 னறிந்தவான். 14 பொன்னி. 15 நாட்டில். 17 - 18 தூருள் வாழ்வோன்: தூரா ஞேச்சன்: தூரி லோச்சன். 19 - 20 காரணக் கொடையான்: தாரணி குடையான். 23 - 24 கவிதை செய்தான்.

கக. அம்பிலே சிலையை நாட்டி யமரர்க்கன் றமுத மீந்த
தம்பிரா னென்னத் தானுந் தமிழிலே தாலை நாட்டிக்
கம்பநா டுடைய கோமான் கவிச்சக்ர வர்த்தி பார்மேல்
நம்புபா மாலை யாலே நரர்க்குமின் றமுத மீந்தான்.

கம்பர் துதி

கஉ. வாழ்வார் திருவெண்ணெய் நல்லூர்ச் சடையப்பன் வாழ்த்துப் [பெறத்
தாழ்வா ருயரப் புலவோ ரகவிரு டானகலப்
போழ்வார் கதிரி னுதித்ததெய் வப்புல மைக்கம்பநாட்
டாழ்வார் பதத்தைச்சிந் திப்பவர்க் கியாது மரியதன்றே.

கங. அம்பரா வணிசடை யரன யன்முதல்
உம்பரான் முனிவரால் போக ரானுயர்
இம்பரார் பிணிக்கரு மிராம வேழஞ்சேர்
கம்பராம் புலவரைக் கருத்தி ருத்துவாம்.

கச. சம்ப நாடன் னுமைசெவி சாற்றுபூங்
கொம்ப ளுடன் கொழுந னிராமப்பேர்
பம்ப நாடழைக் குங்கதை பாச்செய்த
கம்ப நாடன் கழறலை யிற்கொள்வாம்.

கரு. இம்பரு மும்பர் தாமு மேத்திய விராம காதை
தம்பமா முத்தி சேர்தல் சத்தியஞ் சத்தி யம்மே
அம்பரந் தன்னின் மேவு மாதித்தன் புதல்வன் ஞானக்
கம்பன்செங் கமல பாதங் கருத்துற விருத்து வாமே.

கசு. ஆதவன் புதல்வன் முத்தி யறிவினை யளிக்கு மண்ணல்
போதவ னிராம காதை புகன்றருள் புனிதன் மண்மேற்
கோதவஞ் சிறிது மில்லான் கொண்டன்மா றன்னை யொப்பான்
மாதவன் கம்பன் செம்பொன் மலரடி தொழுது வாழ்வாம்.

நூலியற்றிய காலம்

கஎ. ஆவின் கொடைச்சகர ராயிரத்து நூற்றெழித்துத்
தேவன் திருவழுந்தூர் நன்னாட்டு—மூவலூர்ச்
சீரார் குணுதித்தன் சேயமையப் பாடினன்
காரார்கா குத்தன் கதை.

[கக *] 11 தன்னை: யவனை. 15 வள்ளல். 22-23 நரர்க்குநல் லமுத: நாருக்கின் றமுத: நரர்க்குமின் னமுத. [கஉ - கரு * *] [ கசு - கஎ * *] செந்தமிழ் III. 53.

கஅ. எண்ணிய சகாத்த மெண்ணூற் றேழின்மேற் சடையன் வாழ்வு
நண்ணிய வெண்ணெய் நல்லூர் தன்னிலே கம்ப நாடன்
பண்ணிய விராம காதை பங்குனி யத்த நாளிற்
கண்ணிய வரங்கர் முன்னே கவியரங் கேற்றி னானே.

## நூலியற்றிய முறை

கக. கழுந்த ராயுள கழல்பணி யாதவர் கதிர்மணி முடிமீதே
அழுந்த வாளிகள் தொடுசிலை ராகவ வபிநவ கவிநாதன்
விழுந்த நாயிற தெழுவதன் முன்மறை வேதிய ருடனாராய்ந்
தெழுந்த நாயிறு விழுவதன் முன்கவி பாடின தெழுநூறே.

## தொகைக்கவி

உ0. கரைசெறி காண்ட மேழு கதைகளா யிரத்தெண் ணூறு
உரைசெறி விருத்தம் பன்னீ ராயிரத் தொருபத் தாறு
பரவமர் பத்து நாலு படலநூற் றிருபத் தெட்டு
வரமுறு கம்பன் சொன்ன வண்ணமு மெண்பத் தேழே.

## கவித்திறம்

உக. தராதலத்தி னுள்ள தமிழ்க்குற்ற மெல்லாம்
அராவு மரமாயிற் றன்றே—இராவணன்மேல்
அம்புநாட் டாழ்வா னடிபணியு மாதித்தன்
கம்பநாட் டாழ்வான் கவி.

உஉ. இம்பர் நாட்டிற் செல்வமெலா மெய்தி யரசாண் டிருந்தாலும்
உம்பர் நாட்டிற் கற்பகக்கா வோங்கு நீழ லிருந்தாலுஞ்
செம்பொன் மேரு வனையபுயத் திறல்சே ரிராமன் றிருக்கதையிற்
கம்ப நாடன் கவிதையிற்போற் கற்றோர்க் கிதயங் களியாதே.

[கஅ *] 2 சகார்த்த. 3 மூந்நூற். 4 ரு,றின்மேற். 17-18 யுத்த ரத்திற். [கக * *] 2 ராயுன. [உ0 *] இரண்டும் மூன்றும் அடிகள் தம்முள் மாறியுள்ளன. 1 கரைபொரு: கரையுறு. 3 மேழுங்: மாறுங். 5 - 6 யிரத்தைஞ்ஞூறும்: யிரத்தெண் ணூறோடு. 7 உரைசெயும்: உரைதரு: விரைசெறி. 12 தாறும்: தாறில் 13 - 15 பரவுறு மமரீ ரேழும்: பரவுறு சமரம் பத்து: பரசமர் பத்து நாலு: பரிவுறு பாக மூன்று: பருவரை பத்து நாலு. 14 - 15 பாடை பத்து. 17 - 18 றறுபத் தெட்டு(ம்). 19 வரைசெறி: வரமிகு. 23 - 24 (ந்) தொண்ணூற் றூறே. [உக * *] 9 - 10 அம்பினல் வீழ்த்தா. 13 - 14 கம்பநாடாள்வான். [உஉ] 9 - 10 கற்பகத்தி னோங்கு.

### நூற்பயன்

௨௩. நாடிய பொருள்கை கூடும் ஞானமும் புகழு முண்டாம்
வீடியல் வழியு மாக்கும் வேரியங் கமலை நோக்கும்
நீடிய வரக்கர் சேனை நீறுபட் டொழிய வாகை
சூடிய சிலையி ராமன் றோள்வலி கூறு வோர்க்கே.

௨௪. மற்றொரு தவமும் வேண்டா மணிமதி லிலங்கை மூதூர்ச்
செற்றவன் விசையப் பாடல் தெளிந்ததி லொன்று தன்னைக்
கற்றவர் கேட்போர் நெஞ்சங் கருதுவோ ரிவர்கள் பார்மேல்
உற்றர சாள்வர் பின்னு மும்பராய் வீட்டிற் சேர்வார்.

௨௫. இறுவ ரம்பி லிராமவென் பாரும்பர்
நிறுவ ரென்பது நிச்சய மாதலான்
மறுவின் மாக்கதை கேட்பவர் வைகுந்தம்
பெறுவ ரென்பது பேசவும் வேண்டுமோ.

௨௬. அன்ன தான மகிலநற் றானமுங்
கன்னி தானங் கபிலையின் றானமுஞ்
சொன்ன தான பலமெனச் சொல்லுவார்
மன்னி ராம கதைமற வார்க்கரோ.

௨௭. இராகவன் கதையி லொருவிருத் தத்தி
லேகபா தத்தினை யுணர்வோர்
பராவரு மலரோ னுலகினி லவனுற்
பன்முறை வழுத்தவீற் றிருந்து
புராதன மறையு மண்டர்பொற் பதமும்
பொன்றுநா ளதனிலும் பொன்று
றாவணை யமல னுலகெனும் பரம
பதத்தினை யடைகுவ ரன்றே.

[௨௩ *] 7 வீடுயர். 8 - 9 வழிய தாக்கும். 17 டழிய. [௨௪ *] 3 வேண்டேன். 9 பாவில். 10 தெரிந்ததி. 14 கேட்டோர். 15 நெஞ்சிற். உள்ளங். 17 - 18 (ர்)யாவ ரேனும். 18 அன்பால். 19 - 20 உற்றுல காண்டு: 21 - 22 பின்ன ரும்பர்வாழ். 22 - 23 மும்பர்வா ழுலகஞ்: மும்பரா யுலகிற். 24 செல்வார். [௨௫ *] 3 னிராமனென். 4 றோரும்பர்: றோதி னல்; றாலும்பர். 12 வைகுண்டம். 15 பேசுதல். 16 வேண்டுமே. [௨௬ **] 4 றானங்கள். 8 றானமே. 10 தானப். [௨௭ * *] 3 - 4 லொருகவி தன்னி. 7 (க்)கேட்போர்: யுரைப்போர். 11 லவனும். 19 - 20 பொன்றினு மவற்றொடும். 22 வராவணை. 24 - 25 னுலகினு லாய: னுலகினி னுலாம். 27 யணுகுவ.

உஅ. வடகலை தென்கலை வடுகு கன்னடம்
இடமுள பாடையா தொன்றி னாயினும்
திடமுள ரகுகுலத் திராமன் றன்கதை
அடைவுடன் கேட்பவ ரமர ராவரே.

உகூ. வென்றிசே ரிலங்கை யானை வென்றமால் வீர மோத
நின்றரா மாய ணத்தி னிகழ்ந்திடு கதைக டம்மில்
ஒன்றினைப் படித்தோர் தாமு முரைத்திடக் கேட்டோர் தாமும்
நன்றிது வென்றோர் தாமு நரகம தெய்தி டாரே.

௩௰. ஆதியரி யோகமந ராயணர் திருக்கதை
யறிந்தனுதி னம்ப ரவுவோர்
நீதியனு யோகநெறி நின்றுநெடு நாளதி
னிரந்துசெக தண்ட முழுதுக்
காதிபர்க ளாயரசு செய்துளநி னைத்தது
கிடைத்தருள்பொ றுத்து முடிவிற்
சோதிவடி வாயழிவின் முத்திபெறு வாரென
வுரைத்தசுரு தித்தொ கைகளே.

௩௧. இனையநற் காதை முற்று
மெழுதினோர் வியந்தோர் கற்றோர்
அனையது தன்னைச் சொல்வோர்க்
கரும்பொருள் கொடுத்துக் கேட்போர்
கனைகடற் புடவி மீதே
காவலர்க் கரசாய் வாழ்ந்து
வினையம தறுத்து மேலாம்
விண்ணவன் பதத்திற் சேர்வார்.

௩௨. இத்த லத்தி னிராமாவ தாரமே
பத்தி செய்து பரிவுடன் கேட்பவர்
புத்தி மிக்கரும் புண்ணிய முந்தரும்
எத்த லத்து மவனடி யெய்துவார்.

---

[உஅ * *] 6 - 8 பாடைகள் யாதொன் றாயினும். [உகூ * *] 6 - 12 மோது மின்றிரா மாய ணத்தை யியல்புட னுலகி னிற்போர். 13 ஒன்றதைப். [௩௰ - * *] [௩௧ * *] உத்தரகாண்டத்து இறுதியிலுங் காணப்படுகிறது. [௩௨ * *] 16 யெய்துமால்.

ஸ்ரீ:

# கம்ப ராமாயணம்

## பால காண்டம்

---

### பாயிரம்

#### கடவுள் வாழ்த்து

க. உலகம் யாவையுந் தாமுள வாக்கலும்
நிலைபெ றுத்தலு நீக்கலு நீங்கலா
அலகி லாவிளை யாட்டுடை யாரவர்
தலைவ ரன்னவர்க் கேசர ணாங்களே. 1

உ. சிற்கு ணத்தர் தெரிவரு நன்னிலை
எற்கு ணர்த்தரி தெண்ணிய மூன்றினுள்
முற்கு ணத்தவ ரேமுத லோரவர்
நற்கு ணக்கட லாடுத லன்றரோ. 2

ங. ஆதி யந்த மரியென யாவையும்
ஓதி னாரல தில்லென வுள்ளன
வேத மென்பன மெய்ந்நெறி நோன்மையன்
பாத மல்லது பற்றலர் பற்றிலார். 3

#### அவையடக்கம்

ச. ஓசை பெற்றுயர் பாற்கட லுற்றொரு
பூசை முற்றவு நக்குபு புக்கென
ஆசை பற்றி யறையலுற் றேன்மற்றிக்
காசில் கொற்றத் திராமன் கதையரோ. 4

[க] 8 நீங்கிலா: நீக்கிலா: நீங்கிடா. 9 ரலகி. 12 யாரெவர். 14 ரான வர்க். 16. ணங்களே. [உ] 2 ணத்தன்: ணத்திற். 3 றெரிதரு: றிரிதரு: றெரிவரு. 4 மந்நிலை. 11 - 12 னேமுத லோனவன். 15 லாடுது(ந): லாடு கை(ந). [ங] 3 மரியன: மறினை: மரீயென. 7 கில்லன. 8 வுள்ளென. 10 நான்கினும். 12 நன்மையன். 15 பற்றிலர். 16 பற்றரோ. [ச] 12-13 றேன்மற்றவ் வேசில். 12 றேன்றகு.

ரு. முத்த மிழ்த்துறை யின்முறை போகிய
உத்த மக்கவி ஞர்க்கொன் றுணர்த்துவன்
பித்தர் சொன்னவும் பேதையர் சொன்னவும்
பத்தர் சொன்னவும் பன்னப் படுபவோ. 5

சு. துறைய டுத்த விருத்தத் தொகைக்கவிக்
குறைய டுத்த செவிகளுக் கோதில்யாழ்
நறைய டுத்த வசுணைநன் மாச்செவிப்
பறைய டுத்தது போலுமென் பாவரோ. 6

எ. வைய மென்னை யிகழவு மாசெனக்
கெய்த வும்மி தியம்புவ தியாதெனிற்
பொய்யில் கேள்விப் புலமையி னோன்புகல்
தெய்வ மாக்கதை மாட்சி தெரிக்கவே. 7

அ. நொய்தி னெய்யசொன் னூற்கலுற் றேனெனை
வைத வைவின் மராமர மேழ்துளை
எய்த வெய்தவற் கெய்திய மாக்கதை
செய்த செய்தவன் சொன்னின்ற தேயத்தே. 8

கூ. அறையு மாடரங் கும்படப் பிள்ளைகள்
தறையிற் கீறிடத் தச்சருங் காய்வரோ
இறையுங் கேள்வி யிலாதவென் புன்கவி
முறையி னூலறி வாரு முனிவரோ. 9

[ரு - கo] வைப்புமுறை 8, 9, 6, 7, 10, 5; 8, 7, 5, 6, 9, 10; 8, 6, 7, 5, 9, 10; 8, 6, 7, 10, 5, 9; 7, 6, 5, 8, 9, 10; 5, 6, 7, 10, 8, 9; 7, 10, 5, 6, 8, 9; எனப் பலபடியாக வுள்ளன. [ரு] 4 நோக்கிய: யோதிய: போக்கிய. 7 கட்கொன். 8 றுணர்த்துவென். 16 பெறுபவோ: பெறுவரோ: படுமதோ. [சு] 1 துறையெ. 3 - 4 விருத்தங் கவித் தொகைக். 4 தொகைக்கதைக். 8 கோதையாழ் 9 நறையெ: நறைம: மறைய. 11 வசுணன்றன். 13 பறைம. 14 டித்தது. [எ] 7 தியம்பிய. 12 ஞோர்புகல்: ஞோர்புகழ். 14 மாக்கவி. [அ] 8 மேழ்புழை. 10 வெய்தவர்க். 14 செய்தவர். [கூ] 3 கும்மடப். 6 கீறிடில். 9 - 10 இறையுஞான(மி): பொறையிற் கேள்வி. 10 - 11 நூலுண ராதவென்: நூலறியாதவென். 13 முறைமை (நூ). 14 - 15 னூலறிந் தாரு: னூலுணர்ந் தாரு.

9 (i). எறிகட லுலகந் தன்னு ளின்றமிழ்ப் புலவர்க் கெல்லா
முறுவலுக் குரியதாக மொழிந்தனன் மொழிந்த வென்சொற்
சிறுமையுஞ் சிலையி ராமன் கதைவழிச் செறித றன்னால்
அறிவுடை மாந்தர்க் கெல்லா மமிழ்தமொத் திருக்கு மன்றே.
(செந்தமிழ். III, 42.)

நூல்வழி

கo. தேவ பாடையி னிக்கதை செய்தவர்
மூவ ரானவர் தம்முளு முந்திய
நாவி னானுரை யின்படி நான்றமிழ்ப்
பாவி னாலிது ணர்த்திய பண்பரோ. 10

இடம்

கக. நடையி னின்றுயர் நாயகன் றோற்றத்தின்
இடைநி கழ்ந்த விராமாவ தாரப்பேர்த்
தொடைநி ரம்பிய தோமறு மாக்கதை
சடையன் வெண்ணெய்நல் லூர்வயிற் றந்ததே. 11

பாயிரம் முற்றும்.

---

## க. ஆற்றுப்படலம்

க. ஆச லம்புரி யைம்பொறி வாளியுங்
காச லம்பு முலையவர் கண்ணெனும்
பூச லம்பு நெறியின் புறஞ்செலாக்
கோச லம்புனை யாற்றணி கூறுவாம். 12

உ. நீற ணிந்த கடவு ணிறத்தவான்
ஆற ணிந்துசென் றார்கலி மேய்ந்தகிற்
சேற ணிந்த முலைத்திரு மங்கைதன்
வீற ணிந்தவன் மேனியின் மீண்டவே. 13

ங. பம்பி மேகம் பரந்தது பானுவால்
நம்பன் மாதுலன் வெம்மையை நண்ணினான்
அம்பி னாட்டுது மென்றகன் குன்றின்மேல்
இம்பர் வாரி யெழுந்தது போன்றதே. 14

[கo] 1தேவர். 6 ராமவர்: ரன்னவர். 7 தம்முள. 8 - 9 முந்திய னாவி. 10 னாருரை: னாளுரை: னாலுரை. [கக] சில பிரதிகளில் கூ-ன் பின். 4 றோற்றத்தவ். 11 தொல்லைநன்: தொன்மரு. 16 றந்தவே. [க *] சிலபிரதிகளில் நாட்டுப் படலத்தின் முதற் செய்யுளாகவுள்ளது. 14 - 15 லம்புன னாட்டணி: லம்புனை நாடது: லம்புன வாற்றணி: லம்புனை யாறது. [உ *] 4 ணிறத்தவாய். 16 மீண்டதே. [ங] 3 பரந்தன: பரந்துவெம். 4 பானுவின். 10 னாற்றுது. 13-14 இன்ப மாக. 15 யிழிந்தன: யிழிந்தது: யெழுவன: யெழுவது: யெழுந்தன. 16 போன்றவே: போலுமே.

ச. புள்ளி மால்வரை பொன்னென னோக்கிவான்
வெள்ளி வீழிடை வீழ்த்தன தாரைகள்
உள்ளி யுள்ளவெல் லாமுவந் தீயுமவ்
வள்ளி யோரின் வழங்கின மேகமே. 15

ரு. மான நந்தல னாகி மனுநெறி
போன தண்குடை வேந்தன் புகழென
ஞான முந்திய நான்மறை யாளர்கைத்
தான மென்னத் தழைத்தது நீத்தமே. 16

சு. தலையு மாகமுந் தாளுந் தழீஇயதி
னிலைநி லாதிறை நின்றது போலவே
மலையி னுள்ளவெல் லாங்கொண்டு மண்டலால்
விலையின் மாதரை யொத்தது வெள்ளமே. 17

எ. மணியும் பொன்னு மயிற்றழைப் பீலியும்
அணியு மானைவெண் கோடு மகிலுந்தண்
இணையி லாரமு மின்னகொண் டேகலால்
வணிக மாக்களை யொத்தது வாரியே. 18

அ. பூநி ரைத்துமென் றாது பொருந்தியும்
தேன ளாவியுஞ் செம்பொன் விராவியும்
ஆனை மாமத வாற்றொ டளாவியும்
வான வில்லை நிகர்த்தது வாரியே. 19

கூ. மலையெ டுத்து மரங்கள் முறித்துமா
டிலைமு தற்பொருள் யாவையு மேந்தலால்
அலைக டற்றலை யன்றணை வேண்டிய
நிலையு டைக்கவி நீத்தமந் நீத்தமே. 20

[ச] 1 புள்ளின். 3 பொள்ளென: பொம்மென. 4 நோக்கிவான். 6 வீழிட: வீழென: வீழ்திடை. 7 வீழ்ந்தன: வீழ்த்தென: வீழ்வன. 8 தாரைய: வாதரை. 10 யுள்ளதெல்: னுள்ளவெல். 16 வானமே. [ரு] 1-3 மானந் தேர்ந்தனனாகி. 2-3 நேர்ந்தற நோக்கி: நேர்ந்தறநோக்கு: நேர்ந்தவனாக: னொந்தறநோக்கி: முந்துறநோக்கி. 3 னாக. 6 தண்கொடை. 7 வேந்தர். 9 நான. 10 முந்தற: முன்னிய. 15 தழைத்தன. [சு] 4 தழீஇயதன். 5 - 6 னிலைநிலாநிறை: னிலையிலாநிறை. 8 போலவும். 10 னுள்ளதெல். 15 யொத்ததவ். [எ] 6 மாலைவெண். 8 மகிலுநல்: மகிலுந்தன். 13 வணிகர். 15 யொத்தன: யொத்ததவ். [அ] 1 - 2 பூநிரைத்தமென்: பூநிரந்துமென். 5 - 6 தேன்வளாவியுஞ். 7 - 8 செம்பொ னளாவியும். 9-12 ஆனைமாய்தர வானின ளாவியும்: மானமாமணி யும்வரன் றேகலால்: மான மாமணி யும்வகிர்ந் தேகலால்: மானமானமணி வரன்றேகலால்: ஏனை மாம்ணியும் வரன்றேகலால்: ஏனை மாமணி யும்வகிர்ந் தேகலால். 11-12 வாற்றினளாவியும். 15 நிகர்த்தன: நிகர்த்ததவ். [கூ *] சில பிரதிகளில் கக-ன் பின். 4 பறித்துமா: தரித்துமா. 11 யாண்டகை. 15 யொத்ததந்: யொத்தது.

கo. ஈக்கள் வண்டொடு மொய்ப்ப வரம்பிகந்
தூக்க மேமிக வுட்டெளி வின்றியே
தேக்கெ றிந்து வருதலிற் றீம்புனல்
வாக்கு தேனுகர் மாக்களை மானுமே. 21

கக. பணைமு கக்களி யானைபன் மாக்களோ
டணிவ குத்தென வீர்த்திரைத் தார்த்துவெண்
மணிநு ரைக்கொடி தோன்றவந் தூன்றலின்
புணரி மேற்பொரப் போவதும் போன்றதே. 22

கஉ. இரவி தன்குலத் தெண்ணில்பல் வேந்தர்தம்
புரவு நல்லொழுக் கின்படி பூண்டது
சரயு வென்பது தாய்முலை யன்னதிவ்
வுரவு நீர்நிலத் தோங்கு முயிர்க்கெலாம். 23

கங. கொடிச்சிய ரிடித்த சுண்ணங் குங்குமங் கோட்ட மேலம்
நடுக்குறு சந்தஞ் சிந்தூ ரத்தொடு நரந்த நாகம்
கடுக்கைநாள் வேங்கை கோங்கு பச்சிலை கண்டில் வெண்ணெய்
அடுக்கலி னளிந்த செந்தே னகிலொடு நாறு மன்றே. 24

கச. எயினர்தஞ் சீறூ ரப்பு மாரியி னிரியல் போக்கி
வயின்வயி னெயிற்றி மாதர் வயிறலைத் தோட வோடி
அயின்முகக் கணையும் வில்லும் வாரிக்கொண் டலைக்கு நீராற்
செயிர்தருங் கொற்ற மன்னர் சேனையை மானு மன்றே. 25

[கo] 3 மொய்க்க: மோப்ப. 4 வரம்பிகழ்ந். 6-7 மேமிகுந் துட்டெளி: மேமிகுத் துட்டெளி. 13 வாக்குந். 15-16 மக்களை மானுமால். [கக] சில பிரதிகளில் அ-ன் பின். 6 குத்தன. 7-8 வீரத்திஞர்த்தலில். 8 தார்த்தலின்: தார்த்தலும்: தார்த்தன: தார்தலின்: தார்ந்தணி: தார்த்தள்ளி: தார்த்திழீஇ. 9-10 மணிநிரைக்கொடி: மணியுடைக்கொடி. 11-12 வந்துமுந் தூன்றலாற்: தோன்ற வயங்கலாற். 12 தூன்றலாற். 14-15 மேற்போர் பொருவது. 14 யைப்பொரப். 15 போவது: போதுவ: போவன. 16 போன்றவே: போலுமே. [கஉ] 2 நற்குலத்: யின்குலத். 4 வேந்தரும். 5 பரவு. 12-13 யந்நதியுரவு. 14 நீணிலத்: நன்னிலத். 15 தொல்கு. [கங] 7 நடுக்குறீஞ். 8 சாந்தஞ்: சிந்தஞ். 11 நரந்தை. 13 கடுக்கையார். 20 னிசைந்த: னழிந்த: னடுத்த. 21 தீந்தே. [கச] 1 எயினர்வாழ். 6 போக: போக்க: போகி. 8 னெற்றி: னேறி. 9 மார்தம். 12 வேண்டி. 16 வாரிகொண். 19 செயம்வருங்: செயமருங்: செயல்தருங்: செயலருங்: செயிரறுங்: 22 சேனைபு.

கரு. செறிகறுங் தயிரும் பாலும் வெண்ணெயுஞ் சேந்த நெய்யும்
உறியொடு வாரி யுண்டு குருந்தொடு மருத முந்தி
மறியுடை யாயர் மாதர் வலை துகில் வாரு நீராற்
பொறிவரி யரவி னூடும் புனிதனும் போன்ற தன்றே. 26

கசு. கதவினை முட்டி மள்ளர் கையெடுத் தார்ப்ப வோடி
நுதலணி யோடை பொங்க நுகர்வரி வண்டு கிண்டத்
ததைமணி சிந்த வுந்தித் தறியிறத் தடக்கை சாய்த்து
மதமழை யானை யென்ன மருதஞ்சென் றடைந்த மாதோ. 27

கஎ. முல்லையைக் குறிஞ்சி யாக்கி மருதத்தை முல்லை யாக்கிப்
புல்லிய நெய்த றன்னைப் பொருவரு மருத மாக்கி
எல்லையில் பொருள்க ளெல்லா மிடைதடு மாறு நீராற்
செல்லுறு கதியிற் செல்லும் வினையெனச் சென்ற தன்றே. 28

கஅ. காத்தகான் மள்ளர் வெள்ளக் கலிப்பறை கறங்கக் கைபோய்ச்
சேத்தநீர்த் திவலை பொன்னு முத்தமுந் திரையின் வீசி
நீத்தம்வான் றலைய வாகி நிமிர்ந்துபார் கிழிய நீண்டு
கோத்தகா லொன்றி னொன்று குலமெனப் பிரிந்த மாதோ. 29

ககூ. கல்லிடைப் பிறந்து போந்து கடலிடைக் கலந்த நீத்தம்
எல்லையின் மறைக ளாலு மியம்பரும் பொருளீ தென்னத்
தொல்லையி னொன்றே யாகித் துறைதொறும் பரந்த சூழ்ச்சிப்
பல்பெருஞ் சமயஞ் சொல்லும் பொருளும்போற் பரந்ததன்றே.

உ0. தாதுகு சோலை தோறுஞ் சண்பகக் காடு தோறும்
போதவிழ் பொய்கை தோறும் புதுமணத் தடங்க டோறும்
மாதவி வேலிப் பூக வனந்தொறும் வயல்க டோறும்
ஓதிய வுடம்பு தோறு முயிரென வுலாய தன்றே. 31

ஆற்றுப்படலம் முற்றும்.

[கரு] 5 தெளிந்த: சேர்ந்த. 7 உறியொடும். 13 மறியிடை: மறிவிழி. 16 வளை துகில். 17 கவரு. 22-24 புனிதனைப் பொருவு மன்றே. 23-24 போலுமன்றே. [கசு] 6 வேகி: வெய்தி. 10-12 (ப்)புகர்முக வண்டுபாடத். 12. தீண்டத். 14 சிந்தி: சிதறி. 19 மதமலை: மதமளை. 24 தன்றே. [கஎ] 13 எல்லையிற். 19 செல்லிய. 20 கதியுட். 23-24 செல்லுமன்றே. [கஅ] 3 வெள்ளங். 7 சேர்த்தநீர்த். 10 முத்தொடு. 12 வீச. 13-15 நீத்தமாந் தலைய வாகி: நீத்தமான் றலைய தாகி. 16 நிமிர்ந்தபார்: நிமிர்ந்தகார். 17 கிழித்து. 17-18 கிரம்பமீண்டு. 19 கோத்ததா. 20 - 21 லொன்றோ டொன்றின்: லொன்றோ டொன்றிக்: லொன்றோ டொன்று. 23 பிறிந்த. 24 வன்றே: தன்றே. [ககூ] 1 - 2 கல்லிடைக் கிடந்து. 5 கலந்து. 9 ளெல்லா. 15 யாகத். 17 பிரிந்த: விரிந்த. 24 வன்றே. [உ0] 4 சந்தனக். 5 காவு. 10-11 புதுமணற் றடங்க.

## ௨. நாட்டுப்படலம்

௧. வாங்கரும் பாத நான்கும் வகுத்தவான் மீகி யென்பான்
தீங்கவி செவிக ளாரத் தேவரும் பருகச் செய்தான்
ஆங்கவன் புகழ்ந்த நாட்டை யன்பெனு நறவ மாந்தி
மூங்கையான் பேச லுற்றா னென்னயான் மொழிய லுற்றேன். 32

௨. வரம்பெலா முத்தந் தத்து மடையெலாம் பணில மாநீர்க்
குரம்பெலாஞ் செம்பொன் மேதிக் குழியெலாங் கழுநீர்க் கொள்ளை
பரம்பெலாம் பவளஞ் சாலிப் பரப்பெலா மன்னம் பாங்கர்க்
கரும்பெலாஞ் செந்தேன் சந்தக் காவெலாங் களிவண் டீட்டம்.

௩. ஆறுபா யரவ மள்ள ராலைவா யமலை யாலைச்
சாறுபா யோதை வேலைச் சங்கின்வாய்ப் பொங்கு மோசை
ஏறுபாய் தமர நீரி லெருமைபாய் துழனி யின்ன
மாறுமா றாகிப் பாடன் மயங்குமா மருத வேலி. 34

௪. தண்டலை மயில்க ளாடத் தாமரை விளக்கந் தாங்கக்
கொண்டல்கண் முழவி னேங்கக் குவளைகண் விழித்து நோக்கத்
தெண்டிரை யெழினி காட்டத் தேம்பிழி மகர யாழின்
வண்டுக ளினிது பாட மருதம்வீற் றிருக்கு மாதோ. 35

௫. தாமரைப் படுவ வண்டுந் தகைவருந் திருவுந் தண்டார்க்
காமுகர்ப் படுவ மாதர் கண்களுங் காம னம்பும்
மாமுகிற் படுவ வாரிப் பவளமும் வயங்கு முத்தும்
நாமுதற் படுவ மெய்யு நாமநூற் பொருளு மன்னோ. 36

௬. நீரிடை யுறங்குஞ் சங்க நிழலிடை யுறங்கு மேதி
தாரிடை யுறங்கும் வண்டு தாமரை யுறங்குஞ் செய்யாள்
தூரிடை யுறங்கு மாமை துறையிடை யுறங்கு மிப்பி
போரிடை யுறங்கு மன்னம் பொழிலிடை யுறங்கு மேகம். 37

[௧] 5-6 மீகனென்பான். 7 தீங்கறச். 17 நறவை. 19 மூங்கையார். 22 றென்னயான்: லென்னயான். [௨] 19 கரம்பெலாஞ். [௩] 4 ராலையா. 8 யோசை. 10 சங்குவாய். 12 மோதை. 20 றாடிப். 20-21 றாடித் தம்மின். 21 பாடை: பாடின். 22 மயங்குமால்: வயங்குமா. [௪] 3 ளாலத்: 5 - 6 விளக்கமேந்தக்: விளக்கதாகக். 7 கொண்டலை. 9 னேங்கக். 14 யெழுனி. 16 தேம்பின: தேம்பொழி: தேன்பொழி. 23 - 24 திருந்தமன்னோ. [௫ - ௧௧] வைப்புமுறை ௬, ௮, ௭, ௫, ௧௦, ௧௧, ௯; ௬, ௭, ௫, ௮, ௧௦, ௧௧, ௯; ௮, ௭, ௬, ௫, ௧௦, ௧௧, ௯: என்றுங் காணப்படுகிறது. [௫ *] சில பிரதிகளில் ௬-ன் பின். 4 தகைபெறுங். 8, 14, 20 படுப. 22 நாமனும். [௬] 3 சங்கு. 23 - 24 யுறங்குந் தோகை.

எ. படையுழ வெழுந்த பொன்னும் பணிலங்க ளுயிர்த்த முத்தும்
இடையிடை பரம்பிற் காந்து மினமணித் தொகையு நெல்லின்
மிடைபசுங் கதிரு மீன்ற மென்றழைக் கரும்பும் வண்டும்
கடைசியர் முகமும் போதுங் கண்மலர்ந் தொளிரு மாதோ. 38

அ. தெள்விளிச் சிறியாழ்ப் பாணர் தேம்பிழி நறவ மாந்தி
வள்விசிக் கருவி பம்ப வயின்வயின் வழங்கு பாடல்
வெள்ளிவெண் மாடத் தும்பர் வெயில்விரி பசும்பொற் பள்ளி
எள்ளருங் கருங்கட் டோகை யின்றுயி லெழுப்பு மன்றே. 39

கூ. ஆலைவாய்க் கரும்பின் றேனு மரிதலைப் பாளைத் தேனும்
சோலைவாய்க் கனியின் றேனுந் தொடையவிழ் பிழியின் றேனும்
மாலைவா யுகுத்த தேனும் வரம்பிகந் தோடி வங்க
வேலைவாய் மடுப்ப நுங்கி மீனெலாங் களிக்கு மன்றே. 40

க0. பண்கள்வாய் மிழற்று மின்சொற் கடைசியர் பரந்து நீண்ட
கண்கைகான் முகம்வா யொக்குங் களையலாற் களையி லாமை
உண்கள்வார் கடைவாய் மள்ளர் களைகலா துலோவி நிற்பார்
பெண்கள்பால் வைத்த நேயம் பிழைப்பரோ சிறியோர்பெற்றால்.

கக. புதுப்புனல் குடையு மாதர் பூவொடு நாவி பூத்த
கதுப்புறு வெறியே நாறுங் கருங்கடற் றரங்க மென்றால்
மதுப்பொதி மழலைச் செவ்வாய்வாட்படைக் கண்ணின்மைந்தர்
விதுப்புற நோக்கு மன்னார் மிகுதியை விளம்ப லாமே. 42

கஉ. வெண்டளக் கலவைச் சேறுங் குங்கும விரைமென் சாந்துங்
குண்டலக் கோதை மாதர் குடைந்தநீர்க் கொள்ளைச் சாற்றிற்
றண்டலைப் பரப்புஞ் சாலி வேலியுந் தழீஇய வைப்பும்
வண்டலிட் டோட மண்ணு மதுகர மொய்க்கு மாதோ. 43

[எ] 5 ளுதிர்த்த: ளுகுத்த. 7 இடறிய. 8 வரம்பிற். 11-12 தொகையி லெல்லு. 12-15 நெல்லு மிடைபசுங் கதிர்க ளீன்ற. 14 - 15 கதிருமீனு. 16 மென்கழைக். 24 மன்னோ. [அ] 5 நறவை. 11 வழங்கும்: வயங்கும். 15 துச்சி. [கூ] 1 ஆலைபாய். 7 சோலைவீழ். 8 மலரின். 10 தொடையிழி: தொடையழி. 16 வரம்பிகழ்ந். 18 யேங்க. 21 வுண்டு: வேலை. 23 களிப்ப. 24 மாதோ. [க0] 7 கண்கள்கான். 13 உண்கள்வாய். 16 களைகிலா. 17-18 துலோவுகிற்பார். 17 துலோபி: துலாவி: ருலாவி. [கக] 4 போ தொடு. 7 கதுப்புற: கதுப்பொடு. 13 மதுப்பொழி. 16 வாட்கடைக். 19 விதிர்ப்புற: விதிப்புற: விதுப்புறு: வெதுப்புற. 20 நோக்க. 21 மின்னார். [கஉ] கோல. 9 மைந்தர். 10 குடைந்தநீர்: அடைந்தநீர்க். 11 கொள்ளை: கொள்ளச். 12 சாற்றின்: சேற்றிற். 16-18 வேலியின் றரளக் கொத்தின். 17-18 றரளக் கொத்தும். 18 வைப்பின். 20 டோடு: டாட: டாடு.

௧௩. பொருந்திய மகளி ரோடு வதுவையிற் பொருந்து வாரும்
பருந்தொடு நிழல்சென் றன்ன வியலிசைப் பயன்றுய்ப் பாரும்
மருந்தினு மினிய கேள்வி செவியுற மாந்து வாரும்
விருந்தினர் முகங்கண் டன்ன விழாவணி விரும்பு வாரும். 44

௧௪. கறுப்புறு மனமுங் கண்ணிற் சிவப்பொடு சூட்டுங் காட்டி
உறுப்புறு படையிற் றாக்கி யுறுபகை யின்றிச் சீறி
வெறுப்பில களிப்பின் வெம்போர் மதுகைய வீர வாழ்க்கை
மறுப்பட வாவி பேணு வாரணம் பொருத்து வாரும். 45

௧௫. எருமைநா கீன்ற செங்க ணேற்றையோ டேற்றை சீற்றத்
துருமிவை யென்னத் தாக்கி யூழுற நெருக்கி யொன்றாய்
விரியிரு ளிரண்டு கூறாய் வெகுண்டன வினைய நோக்கி
அரியினங் குஞ்சி யார்ப்ப மஞ்சுற வார்க்கின் றாரும். 46

௧௬. முள்ளரை முளரி வெள்ளை முளையிற முத்தும் பொன்னுந்
தள்ளுற மணிகள் சிந்தச் சலஞ்சலம் புலம்பச் சாலிற்
றுள்ளிமீன் றுடிப்ப வாமை தலைபுடை சுரிப்பத் தூம்பி
னுள்வரா லொளிப்ப மள்ள ருழுபக டுரப்பு வாரும். 47

௧௭. சேலுண்ட வொண்க ணாரிற் றிரிகின்ற செங்கா லன்னம்
மாலுண்ட நளினப் பள்ளி வளர்த்திய மழலைப் பிள்ளை
காலுண்ட சேற்று மேதி கன்றுள்ளிக் கனைப்பச் சோர்ந்த
பாலுண்டு துயிலப் பச்சைத் தேரைதா லாட்டும் பண்ணை. 48

௧௮. குயிலினம் வதுவை செய்யக் கொம்பிடைக் குனிக்கு மஞ்ஞை
அயில்விழி மகளி ராடு மரங்கினுக் கழகு செய்யப்
பயில்சிறை யரச வன்னம் பன்மலர்ப் பள்ளி நின்றுந்
துயிலெழத் தும்பி காலைச் செவ்வழி முரல்வ சோலை. 49

[௧௩ - ௧௮] வைப்புமுறை ௧௭, ௧௮, ௧௩-௧௬ என்றுமுள்ளது. [௧௩] 3 ராடு. 4 வதுவையுட். 9 றென்ன. 13-14 மருந்தெனவுதவு. 14 முதவுங். 21 டென்ன. [௧௪] 1 கறுப்புடை. 4 சிவப்பொடு. 7 உறுப்புடை. 9 றாகி. 11 யன்றிச். 13 வெறுப்பின: வெறுப்புடைக். 16. மதுகையின்: மதுகையர். 18 வாக்கை. 19 மறுப்படா. 21 பேண. 23 பொருது. [௧௫] 4-5 ணேற்றினோ டேற்றை. 5 டேற்றைச். 10 யூடுற. 10 - 11 யூழறநோக்கி. 16-17 வெகுண் டென வதனை. 17 வினையை: வனைய: வதனை. 22 வஞ்சுற: மைந்துற. [௧௬] 3 வெள்ளி. 4 முளையற. 9 சிந்திச்: முந்தச். 13 றுள்ளுமீன். 14 றுடிக்க. [௧௭] 2-3 வுண்கணாரிற். 18 சேர்ந்த: சோர்ந்து. 22-23 தேரை பாராட்டும். [௧௮] 3 செய்யுங். 5 குதிக்கு. 16 பனிமலர்ப்: பைம்மலர்ப். 18 நின்று. 21 யீட்டஞ்: காலச்.

க௯. முந்துமுக் கனியி ஞொ முதிரையின் முழுத்த நெய்யிற்
செந்தயிர்க் கண்டங் கண்ட மிடைபடச் செறிந்த சோற்றிற்
றந்தமி லிருந்து தாமும் விருந்தொடு தமதுண் டென்ன
அந்தண ரமுத வுண்டி யயில்வுறு மமலைத் தெங்கும். 50

உ0. முறையறிந் தவாவி னீங்கி முனிவுழி முனிந்து வெஃகும்
இறையறிந் துயிர்க்கு நல்கு மிசைகெழு வேந்தன் காக்கப்
பொறைதவிர்ந் துயிர்க்குந் தெய்வப் பூதல மதனிற் பொன்னின்
நிறைபரஞ் சொரிந்து வங்க நெடுமுது காற்று நெய்தல். 51

உக. எறிதரு மரியின் சும்மை யெடுத்துவா னிட்ட போர்கள்
குறிகொளும் போத்திற் கொல்வார் கொன்றநெற் குவைகள் செய்வார்
வறியவர்க் குதவி மிக்க விருந்துண மனையி னுய்ப்பார்
நெறிகளும் புதையப் பண்டி நிரைத்துமண் ணெளிய வூர்வார்.

உஉ. கதிர்படு வயலி னுள்ள கடிகமழ் புனலி னுள்ள
முதிர்பயன் மரத்தி னுள்ள முதிரைகள் புறவி னுள்ள
பதிபடு கொடியி னுள்ள படிவளர் குழியி னுள்ள
மதுவள மலரிற் கொள்ளும் வண்டென மள்ளர் கொள்வார்.

உ௩. பருவ மங்கையர் பங்கய வாண்முகத்
துருவ வுண்கணை யொண்பெடை யாமெனக்
கருதி யன்பொடு காமுற வைகலும்
மருத வேலியின் வைகின வண்டரோ. 54

[க௯] சில பிரதிகளில் உஉ-ன் பின். 2 - 3 கனியுமாஞு: கனியுநாஞு. 4 முதிரையு. 6 நெய்யுஞ். 7 - 8 செந்தயி ரொடுதேன். 10 முதலிய: மிடையிடை: முடைபடச். 16 - 17 விருந்துநல் லமுதுண்: விருந்தொடு மமுதுண்: விருந்துட னமிழ்துண். 17 தமருண். 17 - 18 தமரி னோடும். 19 - 21 அந்தணர் முதலோ ருண்டி. 20 ரமிழ்த. 22 யயர்வுறு. 23 - 24 மமலை யெங்கும். [உ0] 2-3 தவாவை நீக்கி: தயாவை நீக்கி: தவாவு நீங்கி. 6 வேட்கும். 7 - 10 நிறையறிந் துயிர்க்கு நல்கு நிலமிசை. 10 மிசை யெழு: மிருநில. 11 - 12 வேந்த னென்னப். 12 காக்கும். 13 பொறைய றிந்: பொறையிரந். 16-17 பூதலந் தன்னிற். 20 சொரிந்த. 24 மன்றே. [உக] 4 யெடுத்தவ: யெடுத்தவா: யெடுத்துளா. 5 ரிட்ட. 7-10 குறிகளும் போற்றிக்கொள்வார் கொண்டநெற். 16 தவரவர். 18 னுய்ப்பான். 19 நிறை களும். 22 நிறைத்துமண். [உஉ] 4 கடிசெறி. 5 பொழிலி: புனத்தி. 7 முதிர் பல. 7 - 12 முதிரைகள் புறவினுள்ள முதுபயன் மரத்தி னுள்ள 19 மது வன. 20 மதனிற். [உ௩] 4 வான்முகத். 6 வொண்கணை: வேற்கணை. 11 காமுற்று: காமுகர்.

௨௪. ஈர நீர்படிந் திந்நிலத் தேசில
கார்க ளென்ன வருங்கரு மேதிகள்
ஊரி னின்றகன் றள்ளிட மென்முலை
தாரை கொள்ளத் தழைப்பன சாலியே. 55

௨௫. தோயும் வெண்டயிர் மத்தொலி துள்ளவு
மாய வெள்வளை வாய்விட் டரற்றவுந்
தேயு நுண்ணிடை சென்று வணங்கவும்
ஆயர் மங்கைய ரங்கை வருந்துவார். 56

௨௬. தினைச்சி லம்புவ தீஞ்சொ லிளங்கிளி
நனைச்சி லம்புவ நாகிள வண்டுபூம்
புனற்சி லம்புவ புள்ளினம் வள்ளியோர்
மனைச்சி லம்புவ மங்கல வள்ளையே. 57

௨௭. வள்ளி கொள்பவர் கொள்வன மாமணித்
துள்ளி கொள்வன தூங்கிய மாங்கனி
புள்ளி கொள்வன பொன்விரி புன்னையிற்
பள்ளி கொள்வன பங்கயத் தன்னமே. 58

[௨௩ - ௪௧] வைப்புமுறை: ௨௩, ௨௯, ௨௪, ௨௬, ௩௧, ௩௦, ௨௫, ௩௫, ௨௮, ௨௭, ௩௬, ௪௦, ௪௧, ௩௩, ௩௨, ௩௪, ௩௭, ௩௮, ௩௯; ௨௩ - ௨௬, ௨௯, ௨௭, ௩௦, ௨௮, ௩௧, ௩௨, ௩௩ - ௪௧; ௨௩ - ௨௭, ௩௫, ௨௮, ௨௯, ௩௬, ௩௦ - ௩௪, ௩௭, ௩௯, ௩௮, ௪௦, ௪௧; ௨௩ - ௨௭, ௩௫, ௨௯, ௨௮, ௩௬, ௩௦ - ௩௪, ௩௭ - ௪௧; ௨௩ - ௨௭, ௨௯, ௩௫, ௨௮, ௩௬, ௩௦ - ௩௪, ௩௭ - ௪௧; ௨௩, ௨௯, ௨௪, ௩௧, ௩௦, ௨௫, ௪௦, ௩௫, ௨௬, ௨௮, ௨௭, ௩௬, ௪௧, ௩௩, ௩௨, ௩௪, ௩௭ - ௩௯; ௨௩ - ௨௫, ௩௨, ௨௬, ௨௯, ௩௫, ௨௮, ௩௬, ௩௧, ௩௩, ௩௪, ௩௭ - ௪௧; ௨௩ - ௨௬, ௨௯, ௩௫, ௨௭, ௩௬, ௨௮, ௩௦, ௩௧, ௩௩, ௩௨; ௩௪, ௩௭ - ௪௧; ௨௩ - ௨௫, ௨௯, ௨௬, ௨௮, ௩௦ - ௪௧; ௨௩, ௨௪, ௩௧, ௩௦, ௨௫, ௪௦, ௩௫, ௨௬, ௨௮, ௨௭, ௩௬, ௪௧, ௩௩, ௩௨, ௩௪, ௩௭ - ௩௯; ௨௩ - ௩௧, ௩௩ - ௩௬, ௩௮, ௩௭, ௩௯ - ௪௧; ௨௩ - ௨௬, ௨௯, ௨௭, ௨௮, ௩௦ - ௪௧; ௨௩ - ௨௫, ௩௨, ௨௬, ௨௭, ௨௯, ௩௫, ௨௮, ௩௬, ௩௦, ௩௧, ௩௩, ௩௪, ௩௭ - ௪௧. [௨௪] 4 தேசெலக். 11 றுன்னிட. 12 மென்முலைத்: வுண்முலைத்: வொண்முலைத். [௨௫] 3 மத்தொலித்: மத்தடு. 4 துள்ளல்போய்: துள்ளலே. 5 ஆய. 8 டழைப்பவும். 12 வருந்தவும். 13 ஆய. 16 வருத்துவார். [௨௬] 2, 6, 10, 14 லம்புறு. 8 வண்டுகள். 9 புனைச்சி· [௨௭ *] 4 மாமணி. 9 வெள்ளி. 12 புன்னைகள்·

உஅ. கன்று டைப்பிடி நீக்கிக் களிற்றினம்
வன்றொ டர்ப்படுக் கும்வன வாரிசூழ்
குன்று டைக்குல மள்ளர் குழூஉக்குரல்
இன்று ணைக்களி யன்ன மிரிக்குமே. 59

உகூ. வேளை வென்ற வுழத்தியர் வெம்முலை
ஆளை நின்று முனிந்திடு மங்கொர்பாற்
பாளை தந்த மதுப்பரு கிப்பரு
வாளை நின்று மதர்க்கு மருங்கெலாம். 60

௩0. சூட்டு டைத்தலைத் தூநிற வாரணம்
தாட்டு ணைக்குடை யத்தகை சான்மணி
மேட்டி மைப்பன மின்மினி யாமெனக்
கூட்டி னுய்க்குங் குரீஇயின் குழாமரோ. 61

௩க. முட்டி லட்டின் முழங்குற வாக்கிய
நெட்டு லைக்கழு நீர்நெடு நீத்தந்தான்
பட்ட மென்கழு கோங்கும் படப்பைபோய்
நட்ட செங்நெலி னூறு வளர்க்குமே. 62

௩உ. பிறைமு கத்தலைப் பெட்பி னிரும்புபோழ்
குறைந றைக்கறிக் குப்பை பருப்பொடு
நிறைவெண் முத்தி னிறத்தரி சிக்குவை
உறைவ கோட்டமி னூட்டிடந் தோறெலாம். 63

[உஅ] 1-2 கன்றொ டப்பிடி. 7 கும்வள. 10 டைக்குரல். 12 குழூக்குரல். 13-14 இன்றொ டர்க்களி. 14 ணைக்கழி: டைக்களி. [உகூ *] உகூ-ன் பின். 3 முகத்தியர்: விழிச்சியர். 6 வென்று. 8 மாங்கொர்பாற். [௩0 *] 2 டைத்துணைத். 3 (ச்)செந்நிற. 2 டைத்துழைத். 3 தூய்நிற. 4 வாரணத். 5-6 தாட்டணிற் குடை. 6 டைக்குடை: ணைக்குழை: ணைக்கடை. 7 யுந்தகை: யுந்ததை. 12 யாமெனுக். 14 னுய்க்குங். 15 குரீஇக்: குருவிக்: குருகுக்: 16 குழாமெலாம். [௩க] 3 முழக்குற. 4 வாகிய. 5-6 நெட்டி லைக்கழி. 7 நீர்நிறை: நீரொடு. 8 நீத்தம்போய்ப்: நீர்த்ததான். 11 கோங்கு. [௩உ *] 5-6 குறைக றித்திரள். 7 குப்பைப். 8 பரப்பொடு. 10 முத்த. 11 னிகரரி: னிறைத்தரி. 13 உறுவ: உறையில்: உறைவை. 14-15 கொட்பின வூட்டிடங்: கோட்டன மூட்டுவ: கொட்பினி னூட்டிடங்: கோட்டின வூட்டிடங். 16 தோறுமே.

௩௩. பெருந்த டங்கட் பிறைநுத லார்க்கெலாம்
பொருந்து செல்வமுங் கல்வியும் பூத்தலால்
வருந்தி வந்தவர்க் கீதலும் வைகலும்
விருந்து மன்றி விளைவன யாவையே. 64

௩௪. கலஞ்சு ரக்கு நிதியங் கணக்கிலா
நிலஞ்சு ரக்கு நிறைவள நன்மணி
பிலஞ்சு ரக்கும் பெறுதற் கரியதங்
குலஞ்சு ரக்கு மொழுக்கங் குடிக்கெலாம். 65

௩௫. துருவை மென்பிணை யீன்ற துளக்கிலா
வரிம ருப்பிணை வன்றலை யேற்றைவான்
உருமி டித்தெனத் தாக்குறு மொல்லொலி
வெருவி மால்வரைச் சூன்மழை மின்னுமே. 66

௩௬. கொன்றை வேய்ங்குழற் கோவலர் முன்றிலிற்
கன்று றக்குங் குரவைக் கடைசியர்
புன்ற லைப்புனங் காப்பிடைப் போதரச்
சென்றி சைக்கு நுளைச்சியர் செவ்வழி. 67

௩௭. கூற்ற மில்லையோர் குற்றமி லாமையாற்
சீற்ற மில்லைத்தஞ் சிந்தையின் செம்மையால்
ஆற்ற னல்லற மல்லதி லாமையால்
ஏற்ற மல்ல திழித்தக வில்லையே. 68

[௩௩] ௩௪-ன் பின். 7-8 கல்வியிற் பூத்தலும். 8 பூத்தலும்: பூத்ததால். 11 கீதலும். 14 மின்றி. 15 விழைவன. 16 யாவையோ. [௩௪] 2, 6 ரக்க. 3 நெதியங். 7 நிறைவளர்: நிரைவளை: நிறையன. 8 நன்மணிப்: மாமணி: நீண்மணி. 9 பெலஞ்சு. [௩௫] 5-6 வரும ருப்பின. 6 ருப்புயர்: ருப்பின. 6-7 ருப்பி னகன்றலை. 8 யேறுவான்: யேற்றுவான். 12 மோதையின். 14 மாமலைச். 15 சூழ்மழை. 16 மின்னுமால்: துன்னுமால். [௩௬] 6 வக்குங்: ரப்புங். 7 குரவை. 11 காப்புடைப்: காப்புடை: காப்பிடைப்: காப்பிசை. 12 போதராச்: போர்தரச். 13-14 சென்று ழைக்கு: சென்றி ழைக்கு. 16 செல்வழி. [௩௭] 3 குற்றமில். 6-7 மில்லைதஞ் சிந்தையின்: மில்லைத் தன் சிந்தைநற். 7 சிந்தையிற். 8 செய்கையால்: செவ்வியால். 9-10 ஆற்று நல்லற: ஆற்ற நல்லற. 14 மன்றி. 15 திழிதக: திழிதக்க. 16 வல்லதோ: வில்லரோ.

௬அ. நெறிக டந்து படர்ந்தன நீத்தமே
குறிய மிழ்ந்தன குங்குமத் தோள்களே
சிறிய மங்கையர் தேயு மருங்குலே
வெறிய வும்மவர் மென்மலர்க் கூந்தலே. 69

௬௯. அகிலி டும்புகை யட்டி லிடும்புகை
நகலி ஞாலை நறும்புகை நான்மறை
புகலும் வேள்வியிற் பூம்புகை யோடளாய்
முகிலின் விம்மி முயங்கின வெங்கணும். 70

௭0. குற்ற பாகு கொழிப்பன கோணெறி
கற்றி லாத கருங்க ணுளைச்சியர்
முற்றி லார முகந்துதம் முன்றிலிற்
சிற்றில் கோலிச் சிதறிய முத்தமே. 71

௭௧. சேம்பு காலிறச் செங்கழு நீர்க்குளத்
தூம்பு காலச் சுரிவளை மேய்வன
காம்பு கால்பொரக் கண்ணகன் மால்வரைப்
பாம்பு நான்றெனப் பாய்பசுந் தேறலே. 72

௭௨. இயல்புடை பெயர்வன மயின்மணி யிழையின்
வெயில்புடை பெயர்வன மிளிர்முலை குழல்போற்
புயல்புடை பெயர்வன பொழிலவர் விழிபோற்
கயல்புடை பெயர்வன கடிகமழ் கழனி. 73

[௬அ] 1 - 3 நெறிப ரந்து கடந்தன. 3 படர்ந்தது: பரந்தது: பரந்தன. 6 மிழ்ந்தது. 6 - 8 மிழ்ந்து குங்குமக் கொங்கையே. 10 நங்கையர். 13-14 வெறியு மேயவர். [௬௯] 1 அகலி. 1-2 அகிலென டும்புகை. 4 லடும்புகை. 5 நகிலி. 5-6 நகரி லாலை. 8 நாவலர். 14 - 16 மின்னி முழங்குவ தெங்கணும். 15 முழங்கின: முழங்குவ: முழங்கிய. 16 வெங்குமே. [௭0] 1-2 குற்ற மாகுங்: குற்ற மாகக். 3 கொழிப்பவர்: கொழிப்பெனக்: கொழிப்பது: 6 லாரக். 8 ணுழத்தியர். 14 கோலச். [௭௧ *] 2 கால்பொரச்: கால்பெறச்: கால்பொரு. 4 நீர்க்குளம். 14 நான்றன: ஞான்றெனப். [௭௨ - ௫௧] வைப்புமுறை: ௭௨, ௭௫, ௭௩, ௭௬, ௭௪, ௭௭, ௭அ - ௫௧; ௭௨, ௭௫, ௭௩, ௭௪, ௭௬ - ௫௧. [௭௨] 1 எயில்புடை. 3 வயின்மணி: யினமணி: மயிலணி. 5 குயில்புடை. 7 முலைவிரி: முலையவர்: விளமுலை: விளர்முலை. 8-16 விழிபோற் கயல்புடை பெயர்வன கழனிகள் குழல்போற் புயல்புடை பெயர்வன கடிகமழ் பொழில்கள். 8 குழலிற். 11 பொருமிரு. 12 விழியிற்.

௪௩. இடையிற மகளிர்க ளெறிபுனன் மறுகக
குடைபவர் துவரித ழலர்வன குமுத
மடைபெய ரனமென நடைபயி லளகக்
கடைசியர் முகமென மலர்வன கமலம். 74

௪௪. விதியிணை நகுவன வயில்விழி பிடியின்
கதியிணை நகுவன வவர்நடை கமலப்
பொதியிணை நகுவன புணர்முலை கலைவாழ்
மதியிணை நகுவன வனிதையர் வதனம். 75

௪௫. பகலினொ டிகலுவ படர்மணி மடவார்
நகிலினொ டிகலுவ நளிவள ரிளநீர்
துகிலினொ டிகலுவ சுதைபுரை நுரைகார்
முகிலினொ டிகலுவ கடிமண முரசம். 76

௪௬. காரொடு நிகர்வன கடிபொழில் கழனிப்
போரொடு நிகர்வன புணர்மலை யணைசூழ்
நீரொடு நிகர்வன நிறைகட னிதிசால்
ஊரொடு நிகர்வன விமையவ ருலகம். 77

௪௭. நென்மலை யல்லன நிரைவரு தரளந்
சொன்மலை யல்லன தொடுகட லமிர்த
நன்மலை யல்லன நதிதரு நிதியம்
பொன்மலை யல்லன மணிபடு புளினம். 78

௪௮. பந்தினை யிளையவர் பயில்இட மயிலூர்
கந்தனை யனையவர் கலைதெரி கழகஞ்
சந்தன வனமல சண்பக வனமாம்
நந்தன வனமல நறைவிரி புறவம். 79

[௪௩] 1 இடையிள. 6 - 7 துவரிதழ் மலர்வன. 9 - 10 மடைசெறி யனமென: மடைபெடை யனமென: மடமுறு மனமென. 11 - 12 மடநடை யிளகக்: மடநடை யளகக்: மடநடை யிளகும்: மடநடை பயிலுங். [௪௪] 3 விழியிணை. 12 கலைவாண்: கலைவான். [௪௫] ௪௯-ன் பின்: ௪௨-ன் பின். 5 நகலினொ. 7 நளிர்வள: கனிவள. 11 சுதைபொரு: சுதைவரு: சுரைபுரை. 11 - 12 சுதைபொழி றுயில்கார்: சுதைபொழி நுரைகள். 12 நிரைகார். 15 கடிமணி: கடிகமழ். 16 முரசும். [௪௬] 3 கமழ்பொழில். 7 பொலன்வரை: புணர்முலை. 8 பணைசூழ். [௪௭] 3 நிறைவரு: நிரைதகு: நிரைதரு. 4 தரளச். 4 - 5 தரளந் தொன்மலை: தரளத் தொன்மலை. 8 லமுதின்: லமுத. 11 நளிதரு. 12 நிதியப். [௪௮] 1-2 பந்தணை விரலியர். 3 பயில்விட: பயினட. 10, 14 வனமலர். 15 நறவிரி.

௪௯. கோகில நவில்வன விளையவர் குதலைப்
பாகியல் கிளவிக ளவர்பயி னடமே
கேகய நவில்வன கிளரிள வளையின்
நாகுக ளுமிழ்வன நகைபுரை தரளம். 80

௫௦. பழையர்த மனையன பழநறை நுகரும்
உழவர்த மனையன வுழுதொழி லுரிய
மழவர்த மனையன மணவொலி யிசையின்
கிழவர்த மனையன கிளைபயில் வளையாழ். 81

௫௧. கோதைகள் சொரிவன குளிரிள நறவம்
பாதைகள் சொரிவன பருமணி கனகம்
ஊதைகள் சொரிவன வுறையுறு மமிர்தங்
காதைகள் சொரிவன செவிநுகர் கனிகள். 82

௫௨. இடங்கொள் சாயல்கண் டிளைஞர் சிந்தைபோற்
றடங்கொள் சோலைவாய் மலர்கொய் தாழ்குழல்
வடங்கொள் பூண்முலை மடந்தை மாரொடுந்
தொடர்ந்து போவன தோகை மஞ்ஞையே. 83

௫௩. வண்மை யில்லையோர் வறுமை யின்மையாற்
றிண்மை யில்லைநேர் செறுந ரின்மையால்
உண்மை யில்லைபொய் யுரையி லாமையால்
ஒண்மை யில்லைபல் கேள்வி யோங்கலால். 84

[௪௯] 2 நகுவன: நலிவன. 6 - 7 கிளவிகள் பயிலிய. 6 - 8 கிளவிகள் பயில்வன நடமே: 7 ளவர்வயி. 8 னடமென்: னடைமென்: லியமென்: னடனே. 10 நகுவன: நலிவன. 11 கிளரொளி: கிளரின. 12 முதுசூல்: 14 ணகுவன. 15 நகைநகு: நகைபுரி. [௫௦] 1 பழையவர். 2, 6, 10, 14 மனையென. 3 பனிநறை: பகர்நறை. 4 பயிலும். 7 - 8 வுழுதொழில் புரியு: வுழுதொழில் புரையு. 11 வனவொலி. [௫௧] 3 குளிரியல். 11 வுறைவுறு: வுறையறு. 12 மிரதங்: வமுதங். 15 செவியுறு. 16 கவிகள். [௫௨] 5 றடங்கள். 7 மலர்பெய். 8 தார்குழல் 14 செல்வன. 16 மஞ்ஞைகள். [௫௩] ௫௯-ன் பின். 2 யில்லதோர்: யின்மையோர். 3 - 4 வறிஞ ரின்மையாற். 4 யில்லையாற். 6 யின்மையோர்: யில்லையோர். 8 ரில்லையால் 13-16 வெண்மை யில்லைப்பல் கேள்வி மேவலால். 14 யின்மைபல்.

௫௪. மூக்கிற் றுக்குறு மூரி நந்துநேர்
தாக்கிற் றுக்குறும் பறையுந் தண்ணுமை
வீக்கிற் றுக்குறும் விளியு மள்ளர்தம்
வாக்கிற் றுக்குறு மொலியின் மாயுமே. 85

௫௫. எள்ளு மேனலு மிறுங்குஞ் சாமையுங்
கொள்ளுங் கொள்ளையிற் கொணரும் பண்டியும்
அள்ள லோங்களத் தமுதின் பண்டியுந்
தள்ளு நீர்மையிற் றலைம யங்குமே. 86

௫௬. கூறு பாடலுங் குழலின் பாடலும்
வேறு வேறுநின் றிசைக்கும் வீதிவாய்
ஆறு மாறும்வந் தெதிர்ந்த வாமெனச்
சாறும் வேள்வியுந் தலைம யங்குமே. 87

௫௭. உயருஞ் சார்விலா வுயிர்கள் செய்வினைப்
பெயரும் பல்கதிப் பிறக்கு மாறுபோல்
அயிருந் தேனுமின் பாகு மாயரூர்த்
தயிரும் வேரியுந் தலைம யங்குமே. 88

௫௮. தாலி யைம்படை தழுவு மார்பிடை
மாலை வாயமிர் தொழுகு மக்களைப்
பாலி னூட்டுவார் செங்கை பங்கயம்
வானி லாவுறக் குவிவ மானுமே. 89

௫௯. பொற்பி னின்றன பொலிவு பொய்யிலா
நிற்பி னின்றன நீதி மாதரார்
அற்பி னின்றன வறங்க ளன்னவர்
கற்பி னின்றன கால மாரியே. 90

[௫௪-௫௭] வைப்புமுறை: ௫௫, ௫௭, ௫௬, ௫௪: ௫௫, ௫௪, ௫௬, ௫௭. [௫௪] ௫௫-ன் பின். 2 றுக்குற. 3-4 முரிந்த கோதைநேர். 4 தோதை நேர். 5-6 தாக்கித் தாக்குறும். 7 தழங்கு(ந்): பறையின். 9 - 10 வீக்கித் தாக்குறும். 12 மள்ளர்கை. 15 மொலியு. 16 மாலுமே: மானுமே: மாணுமே. [௫௫*] ௫௩-ன் பின். 6 கொள்பவர். 10 லாங்களத்: லங்களத்: லொண்களத். 11 தருத்தும்: தமிர்தின். 13 தள்ள. 14 நீர்வயிற். 15-16 றரைம யங்குமே. [௫௬ *] ௫௭-ன் பின். 1 கூறும். 8 வேதிவாய். 11 தெதிர்த்த: தொத்த: தடுத்த. 12 தாமெனச். [௫௭ *] ௬௦-ன் பின். 2 சோர்விலா. 3 வுயிரின். 6 செல்கதிப். 9 அயருந். 10 தேனுமென்: 10-11 தேனுநன் பாலு. 12 மாயிடைத். 10-12 தேருமின் னமுது மாயர்தங். [௫௮] 3 தவழு. 5 ஆலை. 7 தூறு. 8 மாக்களைப். 11 செங்கைப். 13 வாணி. 15 குவிதல். [௫௯] 1-2 பொற்பு நின்றன. 4 பொய்யிலார். 7 நீத. 14 னின்றவண்.

சுo. சோலை மாநிலந் துருவி யாவரே
வேலை கண்டுதா மீள வல்லவர்
சாலும் வார்புனற் சரயு வும்பல
காலி னோடியுங் கண்ட தில்லையே. 91

சுக. வீடு சேரநீர் வேலை கான்மடுத்
தூடு பேரினு மூலைவி லாநலங்
கூடு கோசல மென்னுங் கோதிலா
நாடு கூறினா நகரங் கூறுவாம். 92

நாட்டுப்படலம் முற்றும்

---

## ௩. நகரப்படலம்

க. செவ்விய மதுரஞ் சேர்ந்தநற் பொருளிற்
சீரிய கூரிய தீஞ்சொல்
வவ்விய கவிஞ ரனைவரும் வடநூன்
முனிவரும் புகழ்ந்தது வரம்பில்
எவ்வுல கத்தோர் யாவருந் தவஞ்செய்
தேறுவா னுதரிக் கின்ற
அவ்வுல கத்தோ ரிழிவதற் கருத்தி
புரிகின்ற தயோத்திமா நகரம். 93

உ. நிலமகண் முகமோ திலகமோ கண்ணோ
நிறைநெடு மங்கல நாணோ
இலகுபூண் முலைமே லாரமோ வுயிரி
னிருக்கையோ திருமகட் கினிய
மலர்கொலோ மாயோன் மார்பினன் மணிகள்
வைத்தபொற் பெட்டியோ மலரோன்
உலகின்மே லுலகோ வூழியி னிறுதி
யுறையுளோ யாதென வுரைப்பாம். 94

[சுo] 3 துன்னும்: துன்னி. 6 கண்டுதான். 8 வல்லரே: வல்லரோ. [சுக] நகரப்படலத்தின் முதற் செய்யுள். 2 சேருநீர். 4 தான்மடுத். 12 கோதிலார். 14 கூறிநாம்: கூறிப்பின்: கூறினோ. [க] 1 திவ்விய. 3 சேர்ந்தன. 6 கூறிய. 7 தீஞ்சொல்: வின்சொல். 13 புகழ்ந்தன. 14 வரம்பின். 27 வயோத்திமா. [உ] 3 திலதமோ. 7 (ந்)தானோ. 16 நெடியோன். 17-18 மார்பின்மன் மணிகள்: மார்பினன் மாலை: மார்பத்து மாலை: மார்பத்தின் மாலை: மார்பத்து மழுத்தி: மார்பத்து மணித்தார். 21 வானோர்.

௩. உமைக்கொரு பாகத் தொருவனு மிருவர்க்
கொருதனிக் கொழுநனு மலர்மேற்
கமைப்பெருஞ் செல்வக் கடவுளு முவமை
கண்டிலா நகரிது காண்பான்
அமைப்பருங் காதன் முன்பிடித் துந்த
வந்தரஞ் சந்திரா தித்தர்
இமைப்பிலர் திரிவா ரிதுவலா லிதனுக்
கியம்பலா மேதுமற் றியாதே. 95

௪. அயின்முகக் குலிசத் தமரர்கோ னகரு
மளகையு மென்றிவை யயனூர்
பயில்வுற லுற்ற படிபெரும் பான்மை
பகர்திரு நகரது படைப்பான்
மயன்முதற் றெய்வத் தச்சருந் தத்த
மனத்தொழி ஞணினர் மறந்தார்
புயறொடு குடுமி நெடுநிலை மாடத்
திந்நகர் புகலுமா றெவனோ. 96

௫. புண்ணியம் புரிந்தோர் புகுவது துறக்க
மென்னுமீ தருமறைப் பொருளேல்
மண்ணிடை யாவ ரிராகவ னன்றி
மாதவ மறத்தொடும் வளர்த்தார்

[௩] 8 கமைப்பருஞ். 10 - 11 கடவுளர் பிறருங்: கடவுளு முதலோர்: கடவுளே முதலோர். 11 முலகங்: முலகர். 12 - 13 கண்டில ரங்கது: 13 நகரது. 15 அமைப்பெருங். 16-17 காத லிதுபிடித்: காத லதுபிடித். 19 வந்திரஞ். 23 திரிவ. 24 ரீதலா. 25 லதனுக்: ததனுக். 27 முவமைமற்: முவமைவே: மேதுவே. 28 றியாதோ. [௪] 4 நகரு. 6 - 7 மெண்ணிய வயனூற். 7 - 9 யயனூற் பயிலுற வுற்ற. 8 பயனுற. 10 - 11 படிபெரும் பாலும்: பொருட்பெரும் பாலும். 10-13 படிபெரும் பகலும் பலபெருந் திருநகர் : படி(ப்)பெரும் பாலு மிப்பெருந் திருநகர். 11 பகலும். 12-13 பெருந்திரு நகரது: யப்பெருந் திருநகர். 13 நகரிது. 14 படைப்பார். 20 ஞணினல்: ஞணினர். 22 புயறொடுங். 24 நெடுநில: நீணிலை. 26 திருநகர். [௫] 4 சுவர்க்க. 5 மெண்ணுமீ. 7 பொருளே. 8 மண்மிசை. 9 - 10 யாரே யிராகவ. 14 வளர்த்தோர்.

எண்ணருங் குணத்தி னவனினி திருந்திங்
கேழுல காளிட மென்றால்
ஒண்ணுமே யிதனின் வேறொரு போக
முறையிட முண்டென வுரைத்தல். 97

சு. தங்குபே ரருளுந் தருமமும் துணையாத்
தம்பகைப் புலன்களைத் தவிர்க்கும்
பொங்குமா தவமு ஞானமும் புரிந்தோர்
யாவர்க்கும் புகலிட மான
செங்கண்மால் பிறந்தாண் டளப்பருங் காலந்
திருவின்வீற் றிருந்தன னென்றால்
அங்கண்மா ஞாலத் திந்நக ரொக்கு
நன்னக ரமரர்நாட் டியாதோ. 98

எ. அரசெலா மவண வணியெலா மவண
வரும்பெறன் மணியெலா மவண
புரசைமால் களிறும் புரவியுந் தேரும்
பூதலத் தியாவையு மவண
விரசுவார் முனிவர் விண்ணவர் நாகர்
விஞ்சையர் முதலினோ ரெவரும்
உரைசெய்வா ராரு ரானபோ திதனுக்
குவமைதா னறிதர வுளதோ. 99

[ரு] 16 - 17 குணத்த னிவனினி. 17 னிவனினி. 18 திருந்தவ். 18 - 19 திருந்திவ் வேழுல. 20 காள்விட. 22 ஒண்ணுமோ. 23 அதனின். 25 - 26 போகத் துறைவிட. 26 முறைவிட: வுறைவிட. [சு] 1-2 தங்குமா பொருளுந்: தங்கிய பொருளுந். 5 தகும்பகைப். 6 - 7 புலன்களைந் தவர்க்கும்: புலன்கடிந் தவர்க்கும்: புலன்களைந் தவிக்கும். 7 தவிர்த்துப். 11 புணர்ந்தோர்: உணர்ந்தோர். 16 இருந்தாண். 20 - 21 றிருந்தமை தெளிந்தால்: றிருந்தமை தெரிந்தால்: றிருந்தமை தெரியில். 23-24 ஞால நன்னக. 24 தந்நக. 26 (ம்)பொன்னக. [எ] 1 அரைசெலா. 8 புரைசைமா: புரைசெய்மா: புரைசெய்மால். 9-10 கரியும் புரவியந். 15 விரசுவர்: விரைசுவார்: விரைசெயா. 18 இயக்கர். 20 முதலின. 21 ரல்லால்: ரெனவும். 21-24 றென்றால் உரைசெய்வேன் யானே யானபோ: ரெல்லாம் உரைசெய்வே னூனே யானபோ. 22-24 உரைசெய்வாராரு லானபோ. 22-28 உரைசெய்வாரதனலதுவலா லதனுக் குவமைதா னறைதர வுளதோ. 25 ததனுக். 26-28 குவமைவே றியாதென வுளதோ: குவமைதா முண்டென வுரைத்தல். 27 னரிதரோ: னுளதரோ. 27-28 னுளதென்ற லரிதே: னுளதெனற் கரிதே: 28 வுளதே: வுளவே.

அ. நால்வகைச் சதுரம் விதிமுறை நாட்டி
நனிதவ வுயர்ந்தன பனிதோய்
மால்வரைக் குலத்தின் யாவையு மில்லை
யாதலா னுவமைமற் றில்லை
நூல்வரைத் தொடர்ந்து பயத்தொடும் பழகி
நுணங்கிய நுவலரு முணர்வே
போல்வரைத் தல்லா னுயர்வினை யுயர்ந்த
தென்னலாம் பொன்மதி னிலையே. 100

கூ. பஞ்சின்வான் மதியை யூட்டிய வனைய
படருகிர்ப் பங்கயச் செங்கால்
வஞ்சிபோன் மருங்குற் குரும்பைபோற் கொங்கை
வாங்குவே யமைத்தமென் பணைத்தோள்
அஞ்சொலார் பயிலு மயோத்திமா நகரி
னழகுடைத் தோவென வறிவான்
இஞ்சிவா னோங்கி யிமையவ ருலகங்
காணிய வெழுந்ததொத் துளதே. 101

கO. கோலிடை யுலக மளத்தலிற் பகைஞர்
முடித்தலை கோடலின் மனுவின்
நூலிடை நடக்குஞ் செவ்வியின் யார்க்கு
நோக்கருங் காவலின் வலியின்
வேலொடு வாள்விற் பயிறலின் வெய்ய
சூழ்ச்சியின் வெலற்கரு வலத்திற்
சால்புடை யுயர்விற் சக்கர நடாத்துந்
தன்மையிற் றலைவரொத் துளதே. 102

[அ] 2 சதிரம். 5 நனிதக. 6 முயன்றன. 9 குலத்தில். 9-10 குலங்களனைத்தினு. 15 நூல்வகைத். 17 பயத்தொடு. 20 நுவல்வரு. 20-21 நூலவருணர்வே: வுணர்வினை ருணர்வே. 22 போல்வகைத். 24 லுணர்வினை. 26 வென்னலாம். [கூ] 1 பஞ்சிவான்: பஞ்சிவாண: பஞ்சின்வாண. 4 தனைய. 12-13 வயங்குவே யமைத்தமென்: வாங்குவேய் வைத்தமென். 18-19 நகர மழகுடைத். 20 தன்றெனா: தாமென. 20-21 தன்றெனி லறிவான். 27 தெழுவதொத்: வெழுவதொத். 27-28 வெழுந்ததொத் துளதால். [கO] 1 கோலுடை. 4 பகைவர். 7 மனுமன். 8 நூல்நெறி. 9 கிடக்குஞ். 10 செய்கையின்: செவ்வையின். 17 பயிற்றலின். 21 நலத்திற்: (ம்)பிலத்திற். 22 சாலுடை. 23 மரபிற்: யுயர்பிற்: மாவிற். 25 நடத்துங்.

கக. மேவரு முணர்வு முடிவிலா மையினல்
வேதமு மொக்கும் விண்புகலாற்
றேவரு மொக்கு முனிவரு மொக்குந்
திண்பொறி யடக்கிய செயலாற்
காவலிற் கலையூர் கன்னியை யொக்குஞ்
சூலத்தாற் காளியை யொக்கும்
யாவரு மொக்கும் பெருமையா லெய்தற்
கருமையா லீசனை யொக்கும். 103

கஉ. சினத்தயில் கொலைவாள் சக்கரந் தண்டு
சிலைமழுத் தோமர முலக்கை
கனத்திடை யுருமின் வெருவருங் கவண்க
லென்றிவை கணிப்பில வுலங்கின்
இனத்தையு முவணத் திறையையு மியங்குங்
காலையு மிதமல நினையும்
மனத்தையு மெறியும் பொறியுள வென்றால்
மற்றினி யுணர்த்துவ தெவனே. 104

கங. பூணினும் புகழே யமையுமென் றினைய
பொற்பினின் றுயிர்தனி புரக்கும்
யாணரெண் டிசைக்கு மிருளற விமைக்கு
மிரவிதன் குலமுத னிருபர்

[கக] அ-ன் பின். 1-2 மேவர வுணர: மேவுற வுணர. 2 முணர்வின். 5-6 வேதமே யொக்கும். 5-7 வேதமும் பொருள்களு மொக்கும். 22 யாவையு. [கஉ] 3-7 சிலைமழுத் தண்டு செஞ்சரங் கப்பணந் திகிரி: சிலைமழுத் தண்டு சக்கரந் தோமர முலக்கை: சிலைமழுத் தண்டு சக்கரந் தோமரம் வலயம்: சிலைமழுத் தண்டு செம்புருக் கரக்கெணெய் சிவணிக்: சிலைமழுத் தண்டு செம்புருக் கரக்கெணெய் சிவணக். 5-7 செம்புருக் கரக்கெண்ணெய் சிவணிக். 6 (க்)கப்பண. 8 கனத்தடை. 9 யுருமும்: யுருமில். 11-12 கவண்க னெறியவை. 14 கொதுகின்: கொசுகின்: வொலுங்கின். 14-15 தெகினத் தினத்தையு. 16-17 முவணர்க் கிறையையு. 18 மியங்கு. 20 மிதமில: மிதமலால்: மிதமலார். 21 நினைவார்: நினைப்பேரர். 25 தென்றால்: வென்னில். 27 யுரைக்குவ. 27-28 யுணர்த்துமாறெவனே. [கங] 4 றன்ன: றனைய: றறனின். 5 பொற்புநின். 6 றுயிர்நனி: றுயர்தனி. 13-14 குலமுதல் வேந்தர்.

சேனையுங் கடந்து திசையையுங் கடந்து
திகிரியுஞ் செந்தனிக் கோனும்
ஆணையு நடாத்து மாயினன் னகருக்
கணியென வியற்றிய தன்றே. 105

கச. அன்னமா மதினுக் காழிமால் வரையை
யலைகடல் சூழ்ந்தன வகழி
பொன்விலை மகளிர் மனமெனக் கீழ்போய்ப்
புன்கவி யெனத்தெளி வின்றிக்
கன்னிய ரல்குற் றடமென யார்க்கும்
படிவருங் காப்பின தாகி
நன்னெறி விலக்கும் பொறியென வெறியுங்
கராத்தது நவிலனுற் றதுநாம். 106

கரு. ஏகுகின்ற தன்கணங்க ளோடுமெல்லை காணலா
நாகமொன் றகன்கிடங்கை நாமவேலை யாமென [மென்
மேகமொண்டு கொண்டெழுந்து விண்டொடர்ந்த குன்ற
ருகநொந்து நின்றதாரை யம்மதிற்கண் வீசுமே. 107

கசு. அந்தமா மதிற்புறத் தகத்தெழுந் தலர்ந்துநீள்
கந்தநாறு பங்கயந்த கானமான மாதரார்
முந்தவாண் முகங்களுக் குடைந்துபோன மொய்ம்பெலாம்
வந்துபோர் மலைக்கவான் மதில்வளைந்த போனுமே. 108

[கங] 16 கடந்த. 18-19 கடந்த திகிரியார். 20 செகந்தனிக். 23 நடக்கு: நடத்து: (ங்) கிடக்கு: (ங்) காக்கு. 24 மரணையு: மரணினும். 24-25 மாயினு நகருக்: மாயினிங் நகருக்: மாகிலங் நகருக். 24-26 மாயினு நகரு மணியென. [கச] 6 சூழ்ந்தன்ன. 18 யாரும். 19 கடப்பரும்: கடிவருங். 19-21 கடப்பரும் படியினவாகி. 21 வாகி. 25-26 வெறியு நகரது. 25-28 வெறியு நாரம தறையலுற் றதுவாம். 26 கராமது. 27-28 நவில லுற் றனநாம். [கரு] 2 தங்கணங்க. 4 காண்கிலா. 8 யாமென. 10 கொண் டெழுந்த. 14 நின்றதாரை. [கசு-கக] வைப்புமுறை: கசு, கக, கஅ, கஎ; கசு; கஎ, கக, கஅ. [கசு] 4 தலர்ந்தபூங்: தலர்ந்தநீள்: தலர்ந்துமிழ். 5 கந்தமான. 9 முந்துவாண்: முந்தைவான்: முந்திவாண். 10 முகத்தினுக். 11 கிடைந்துபோன. 12 மொய்ந்தெலாம். 14 மலைத்துவான்: மலைத்து மாறு மலைக்கலான்: மலைக்கமா: விளக்கமா: விளக்கவான். 15 மதில் வளைத்த. 15-16 மதில்வளைத்த மானுமே: மதில்வளைத்தன் மானுமே. 16 மானுமே: போன்றவே: தொக்குமே.

கஎ. சூழ்ந்தநாஞ்சில் சூழ்ந்தவாரை சுற்றுமுற்று பாரெலாம்
போழ்ந்தமா கிடங்கிடைக் கிடந்தபோ ரிடங்கர்மாத்
தாழ்ந்தவங்க வாரியிற் றடிப்பொணு மதத்தின்வீழ்ந்
தாழ்ந்தயானை மீள்கிலா தழுந்துகின்ற போன்றவே. 109

கஅ. ஆளுமன்னம் வெண்குடைக் குலங்களா வருங்கராக்
கோளெலா முலாவுகின்ற குன்றமன்ன யானையாத்
தாளுலாவு பங்கயத் தரங்கமே துரங்கமா
வாளும்வேறு மீனமாக மன்னர்சேனை மானுமே. 110

ககூ. ஈரும்வாளின் வால்விதிர்த் தெயிற்றிளம் பிறைக்குலம்
பேரமின்ன வாய்விரித் தெரிந்தகட் பிறங்குதீச்
சோரவொன்றை யொன்றுமுன் றொடர்ந்துசீ றிடங்கர்மா
போருவந்து சீறுகின்றபோரரக்கர் போலுமே. 111

உ0. விளிம்புதெற்றி முற்றுவித்து வெள்ளிகட்டி யுள்ளுறப்
பளிங்குபொற் றகட்டகத் தடுத்துறப் படுத்தலிற்
றளிந்தகற் றலத்தொடச் சலந்தினைத் தனித்துறத்
தெளிந்துணர்த்து கிற்றுமென்ற றேவராலு மாவதே. 112

[கஎ] கஅ-ன் பின். 1 சூழ்ந்துநாஞ்சில். 2 சூழ்ந்தவீரை: சூழ்ந்த பாரை. 3 சுற்றமுற்று. சுற்றுமுற்ற. 7 கிடந்தபே. 7-8 கிடந்துபொங் கிடங்கர்மாத்: கிடந்தபொங் கிடங்கர்மாத்: (த்)துடர்ந்துபொங் கிடங்கர்மாத்: (த்)துரந்துபொங் கிடங்கர்மாத். 9 தாழ்ந்துவங்க. 9-11 தாழ்ந்தவங்கு வாரியிற் றடிப்பொணு. 11 றடுக்கொணு: றடிப்புணு. 12-13 மதத்தினு லாழ்ந்த யானை 14 மீதெழுந்: மீள்கலா. 14-15 மீதெலா மழுந்திநின்ற. 16 போலுமே: போன்றதே. [கஅ] ககூ-ன்பின். 4 யருங்கராக்: வருங்கராம்: வருங்கரா. 8 யானையாய்த். 10 வெங்கதத். 11 தரங்கமுந். 12 துரங்கமாய். 14 மீனதாக: வில்லுமின்னு: வில்லுமன்னு: மீனுமாக. [ககூ] கசு-ன் பின்: கஎ-ன் பின்: 1 ஈரும்வாலின். 2 வாள்விதிர்த்: வால்விரித். 5 பேரமின்னி. 6 நாதிமிர்த்: வாய்விரிந். 7 தெதிர்ந்தகட். 8 பிறங்குதீ. 9-10 சோரவொன்றொடொன்றுமுன். 10 யொன்றுபின். 11 றொடர்ந்துசென். 12 றிடங்கர்மாப். 13 போருகந்து: போரில்வந்து: போரெதிர்ந்து: போரின்வந்து. 16 போன்றதே. [உ0] கஎ-ன் பின். 1 விளிம்புசெற்றி: விளிம்புசுற்று: விளிம்புசுற்றி. 1-2 விளிம்புமுற்று சுற்றுவித்து. 6-7 றகட்டகட் டடுத்துறப்: றகட்டிடத் தடுத்துறப்: றகட்டகத் துடுத்துறப்: றகட்டினூ டகத்துறப்: றலத்தகட் டடுத்துறப்: றலத்தகட் டகத்துறப். 9 றளிந்துகற்: றளிர்ந்தகற்: 11-12 சலத்தினைக் கணித்துருத்: சலந்தினைக் கணித்துறத். 13-14 தெளிந்துணர்த்த கிற்றுமென்று: தெளிந்துரைத்தல் கிற்றுமென்ற: தெளிந்துரைத்து கிற்றுமென்ற. 16 மாவதோ.

உக. அன்னநீ ரகன்கிடங்கு சூழ்கிடந்த வாழியைத்
துன்னிவேறு சூழ்கிடந்த தூங்குவீங் கிருட்பிழம்
பென்னலா மிறும்புசூழ் கிடந்தசோலை யெண்ணிலப்
பொன்னின்மா மதிற்குடுத்த நீலவாடை போலுமே. 113

உஉ. எல்லைநின்ற வென்றியானை யென்னநின்ற முன்னமால்
ஒல்லையும்பர் நாடளந்த தாளின்மீ துயர்ந்துபோய்
மல்லன்ஞாலம் யாவுநீதி மாறுரு வழக்கினால்
நல்லவாறு சொல்லும்வேத நான்குமன்ன வாயிலே. 114

உங. தாவில்பொற் றலத்தினிற் றவத்தினோர்க டங்குநாட்
பூவுயிர்த்த கற்பகப் பொதும்பர்புக் கொதுங்குமால்
ஆவியொத்த சேவல்கூவ வன்பின்வந் தணைந்திடா
தோவியப் புறுவின்மா டிருப்பவூடு பேடையே. 115

உச. கல்லடித் தடுக்கிவாய் பளிங்கரிந்து கட்டிமீ
தெல்லுடைப் பசும்பொன்வைத் திலங்குபன் மணிக்குலம்
வில்லிடக் குயிற்றிவாள் விரிக்கும்வெள்ளி மாமரம்
புல்லிடக் கிடத்திவச் சிரத்தகால் பொருத்தியே. 116

உரு. மரகதத் திலங்குபோதி கைத்தலத்து வச்சிரம்
புரைதவிர்த் தடுக்கிமீது பொன்குயிற்றி மின்குலா
நிரைமணிக் குலத்தினொளி நீள்வகுத்த வோளிமேல்
விரவுகைத் தலத்தினுய்த்த மேதகத்தின் மேலரோ. 117

[உக] 2 ளகன்கிடங்கு. 10 யிறும்புசூழ். 13 பொன்னின்மால்: பொன்னிமா. 14 நகர்க்குடுத்த: நகர்க்கணிந்த: வரைக்குடுத்த: மதிற் கணிந்த: மதிற்கமைந்த. [உஉ] 2. வெற்றியானை. 3 யென்னநின்று. 4 முன்னர்மால்: முன்னைமால். 8 துயர்ந்தவான்: துயர்ந்துவான். 8-10 துயர்ந்ததால் மல்லல்ஞால மேழுநீதி. 15 நாலுமன்ன. [உங] உரு-ன் பின்: உசு ன் பின். 1 தாவுபொற். 2 றலத்தினற்: றலத்துநற். 2-3 றலத்தினர் தவத்தினோர்க. 4 டங்குதாட். 5 பூவுயர்த்த. 8 கொதுங்குமால். 10-11 சேவல்கூவ வருகுவந்: வன்புசேவல் கூவவந். 12 தணைந்திடா: திணைந்திடா: தணைத்திடா. 13 ஓவியப். 15 டிருக்கவூடு. [உச] உங-ன் பின். 1 கல்லடுத்: கல்லெடுத்: கல்லிடித். 1-2 கல்லடுத் தடக்கிவாய். 2 தடுக்கிநற். 3 பளிக்கரிந்து. 4-5 கட்டிமே லெல்லுடைப். 5 தெல்லிடப்: யெல்லிடப்: யெல்லுடைப்: யெல்லிடைப்: யெல்லுறப். 12 மரகதம். [உரு] 1 மரதகத். 3 கைக்குலத்து: கைத்தலத்த. 4 வச்சிரப். 5 புரைதபுத்: புரைதகர்த். 6 தடுத்துமீது. 8 யின்குலா. 10 (த்)தலத்தினொளி. 12 வெள்ளிமேல்: வாளிமேல்: வோதிமேல்: தூணின்மேல்: வோளியின்: வொளியின்மேல். 14 தலத்தினுற்ற. 16 மீதரோ.

௨௬. ஏழ்பொழிற்கு மேழ்நிலைத் தலஞ்சமைத்த தென்னநூல்
ஊழுறக் குறித்தமைத்த வும்பர்செம்பொன் வேய்ந்தயல்
சூழ்சுடர்ச் சிரத்தினன் மணித்தசும்பு தோன்றலால்
வாழ்நகர்க் குலக்கொழுந்தை மௌலிசூட்டி யன்னதே. 118

௨௭. திங்களுங் கரிதென வெண்மை தீற்றிய
சங்கவெண் சுதையுடைத் தவள மாளிகை
வெங்கடுங் கால்பொர மேக்கு நோக்கிய
பொங்கிரும் பாற்கடற் றரங்கம் போலுமே. 119

௨௮. புள்ளியம் புறவிறை பொருந்து மாளிகை
தள்ளருந் தமனியத் தகடு வேய்ந்தன
எள்ளருங் கதிரவ னிளவெ யிற்குழாம்
வெள்ளியங் கிரிமிசை விரிந்த போலுமே. 120

௨௯. வயிரநற் கான்மிசை மரக தத்துலாம்
செயிரறப் போதிகை கிடத்திச் சித்திரம்
உயிர்பெறக் குயிற்றிய வும்பர் நாட்டவர்
அயிருற விமைப்பன வளவில் கோடியே. 121

௩௦. சந்திர காந்தத்தின் றலத்த சந்தனப்
பந்திசெய் தூணின்மேற் பவளப் போதிகைச்
செந்தழன் மணித்துலாஞ் செறிந்த திண்சுவர்
இந்திர நீலத்த வெண்ணில் கோடியே. 122

[௨௬] 2 மேனிலத்: மேனிலைத்: மேழ்நிலத். 3-4 தலஞ்சமைந்த தென்றுநூல். 4 வென்னுநூல்: தென்னலால்: தென்னவே: தென்னுநூல்: தென்னலாம்: வெண்ணுநூல். 6 குறித்தமைத்து: குவித்தமைத்த. 7 தும்பர் செம்பொன். 8 வேய்ந்துமீச்: வேய்ந்தயிற். 10 சிரத்தூநன்: சிரத்தின்மா: சிரத்தினின். 13 வாழ்நிலக்: வாணகர்க். 16 யன்னவே. [௨௭] 4 தீற்றியச். 6 சுதைபுரை: சுதைபுரி. 7 தரள. [௨௮] 2 புறவிடை: புறவினிற்: புறவிரைப். 13 வெள்ளிவெண். 14 கிரியிடை. [௨௯] 3-4 மரத கத்துலாம். 9 செயிரறு. 10 குறித்தன: குயிற்றின. 12 நாட்டினும். 13 அயர்வுற. 15-16 வளவி லாதன. 16 காட்சியே. [௩௦] ௩௧-ன் பின். 2 காந்தத்திற். 2-4 காந்தத்திற் றரளம் வேய்ந்தன: காந்தத்தி னலத்தஞ் சேர்ந்தன. 3 நிலத்த: நலத்த: றலத்தைச். 6 தூணின. 9 செந்தனி. 9-10 செந்தம ணியத்துலாஞ். 11 செறித்த. 14-15 நீலத்தி னெண்ணில். 16 லாதன.

௩௧. பாடகக் காலடி பதுமத் தொப்பன
சேடரைத் தழீஇயன செய்ய வாயின
நாடகத் தொழிலன நடுவு துய்யன
ஆடகத் தோற்றத்த மகளி ரல்லன. 123

௩௨. புக்கவர் கண்ணிமை பொருந்து றுதொளி
தொக்குடன் றயங்கிவிண் ணவுரிற் றோன்றலாற்
றிக்குற நினைப்பினிற் செல்லுந் தெய்வவீ
டொக்கநின் றிமைப்பன வும்பர் நாட்டினும். 124

௩௩. அணியிழை மகளிரு மலங்கல் வீரருந்
தணிவன வறநெறி தணிவி லாதன
மணியினும் பொன்னினும் வனைந்த வல்லது
பணிபிறி தியன்றில பகலை வென்றன. 125

௩௪. வானுற நிவந்தன வரம்பில் செல்வத்த
தானுயர் புகழெனத் தயங்கு சோதிய
ஊனமி லறநெறி யுற்ற வெண்ணிலாக்
கோனிகர் குடிகடங் கொள்கை சான்றன. 126

௩௫. அருவியிற் றாழ்ந்தமுத் தலங்கு தாமத்த
விரிமுகிற் குலமெனக் கொடிவி ராயன
பருமணிக் குவையன பசும்பொற் கோடிய
வருமயிற் கணத்தன மலையும் போல்வன. 127

௩௬. அகிலிடு கொழும்புகை யளாய்ம யங்கின
முகிலொடு வேற்றுமை தெரிக்கி லாமுழுத்

[௩௧ *] 2 காலன: காலடிப். 4 தேய்ப்பன. 8 வர்யன:: செய்வன. 10 தொழிலின. 12 தூயன. 13 மாடகத். 15-16 வளவி லாதன: மகளிர்ப் போன்றன. [௩௨] 2 கண்ணின: கண்ணிணை. 4 றுமெதொளிர்: றுமையால். 5 தொக்குட. 5 - 6 தொக்குடைத் தயங்கிவிண்: தொக்குட றயங்கவிண். 6 றயங்கவிண்: றயங்குவிண். 8 றோன்றலிற். 9 றிக்குறு. 10 நினைப்பினுஞ். 12 தேவர்வீ. 13 டொக்குநின். [௩௩] 1 மணியிழை. 5-6 தணிவற நெறி களுந். 7 தணிக்கி. 14-16 நியன்றன பாங்கு மில்லையே. [௩௪] 2 நிமிர்ந்தன. 4 செல்வத்தோர். 6 புகழன. 9 ஈனமி. 12 வெண்ணிலா: வெண்ணிலக்: வெண்ணில். 13 கோனகர். 14 குடிபல. 15 கொள்ளை. 15-16 குன்றுகடரவே. [௩௫] 2 றாழ்ந்தமுத். 3 திலங்கு: தலங்குந். 4 சோதிய. 8 ராயின: ராவின. 10 குவையெனப்: குவையின. 11 பசும்பொன். 13 பொருமயிற். 14 கனத்தன. 16 போன்றன: அல்லன. [௩௬] ௩௩-ன் பின்: ௩௪-ன் பின். 2 கொடும்புகை. 7 தெரிக: தெரிக்க.

துகிலொடு நெடுங்கொடிச் சூல மின்னிடப்
பகலொடு மின்மினி பறப்ப போன்றவே. 128

௩௭. துடியிடைப் பணைமுலைத் தோகை யன்னவர்
அடியிணைச் சிலம்புபூண் டரற்று மாளிகைக்
கொடியுடைத் தரளவெண் கோவை சூழ்வன
கடியுடைக் கற்பகங் கான்ற மாலையே. 129

௩௮. காணரு நெடுவரைக் கதலிக் கானம்போற்
கோணிமிர் பதாகையின் குழாந்த ழைத்தன
மாணொளி மழுங்கிட மயங்கி வைகலுஞ்
சேண்மதி தேய்வதக் கொடிக டேய்க்கவே. 130

௩௯. பொன்றொடர் மண்டப மல்ல பூத்தொடர்
மன்றுக ளல்லன மாட மாளிகைக்
குன்றுக ளல்லன மணிசெய் குட்டிம
முன்றில்க ளல்லன முத்தின் பந்தரே. 131

௪௦. மின்னென விளக்கென வெயிற்பி ழம்பெனத்
துன்னிய தமனியத் தொழிற மைத்தவக்
கன்னிநன் னகர்நிழல் கதுவ லாலரோ
பொன்னுல கானது புலவர் வானமே. 132

9 துகிலுடை: துகிலிடை. 10 நெடுங்கொடி. 11 சூழல்: சூழ. 12 மின்னுவ: மின்னிடைப். 11-12 சூழல் மின்னென. 13 - 16 பகலொடு பன்மணி பரப்பும் போன்றன: பகலிடு பன்மணிப் பரப்புத் தோன்றுமே: பகலொடு மின்மினி பரப்ப போன்றவே: பகலிடு பவர்மணி பார்ப்புப் போன்றதே: பகலிடு வினமணி பரப்பத் தோன்றுமே: பகலிடு மினமணி பரப்புப் போன்றன: பகலிடு மின்னணி பரப்புப் போன்றவே: பகலிடை மின்மினி பறப்பத் தோன்றுமே: பகலிடை யினமணி பரப்பல் போன்றவே. 15-16 பறப்ப தொன்றுமே: பரப்ப போன்றன. 16 தோன்றின. [௩௭] 5 அடியிணைச். 7 டரற்ற. 9 கொடியிடைத்: கொடியுடன். 14-15 கற்பகக் காவை. 16 போன்றவே. [௩௮] 1 கானிமிர்: கானவர்: காண்வரு: காண்டரு: காண்மரு. 5 ருணிமிர்: ருனிமிர். 8 கைத்தன: ழைந்தன. 9 மாணணி: வாணனி: வாணிவா. 9-11 வாணில வழங்கிட மழுங்கி. 10-11 மழுங்கிட மடங்கி: வயங்கிட மழுங்கி: வயங்கிட மடங்கி: வயங்குறத் தவழ. 14 தேய்ந்ததக். [௩௯ *] 1 பொன்றிணி. 4 பூங்தொடர்: பூங்தொடை. 11-12 மணிகள் கூடிய: மணிகள் சூட்டிய: மணிகள் கூட்டிய: மணிகள் கூட்டம: மணிகள் கூட்டின. [௪௦ *] 7-8 தொழில மைத்தன. 8 ழைத்தலிற். 13-14 பொன்னக ரானது: பொன்னக ரானதப். 14 காயதப்: காயது: காவது: கானவப்: கானதப்.

சக. எழுமிடத் தகன்றிடை யொன்றி யெற்படு
பொழுதிடைப் போகலிற் புரிசைப் பொன்னகர்
அழன்மணித் திருநகை யயோத்தி யாளுடை
நிழலெனப் பொலியுமா னேமி வான்சுடர். 133

சஉ. ஆய்ந்தமே கலையவ ரம்பொன் மாளிகை
வேய்ந்தகா ரகிற்புகை யுண்ட மேகம்போய்த்
தோய்ந்தமா கடனறுந் தூம நாறுமேற்
பாய்ந்ததா ரையினிலை பகர வேண்டுமோ. 134

ச௩. குழலிசை மடந்தையர் குதலை கோதையர்
மழலையங் குரலிசை மகர யாழிசை
எழிலிசை மடந்தைய ரின்சொ லின்னிசை
பழையர்தஞ் சேரியிற் பொருநர் பாட்டிசை. 135

சச. கண்ணிடைக் கனல்சொரி களிறு கால்கொடு
மண்ணிடை வெட்டுவ வெட்ட மைந்தர்தம்
பண்ணைகள் பயிலிடங் குழிப டைப்பன
சுண்ணமக் குழிகளைத் தொடர்ந்து தூர்க்குமே. 136

சரு. பந்துகண் மடந்தையர் பயிற்று வாரிடைச்
சிந்தின முத்தின மவைதி ரட்டுவார்
அந்தமில் சிலதிய ரற்ற குப்பைகள்
சந்திர னொளிகெட நிலாத்த லைப்பன. 137

[சக] சஉ-ன் பின். 1-3 எழுமிடை கூட்டிடை யேற்றி. 2-3 தகன்றி டத் தேற்றி. 3 யேறி: யெற்றி: பொன்றி. 5-6 பொழுதிடை நீட்டிய. 6 போதலிற். 7 - 8 புரிசை மாநகர். 8 பொன்னணி. 8-12 பொன்மதி ல்ழன்மணி திருத்திய வயோத்தி யாளுடை: பொன்மதி லழன்மணித் திரு நக ரயோத்தி யாளுடை: பொன்மதி லழன்மணி திருத்திய வயோத்தி மாநகர். 12 தன்னுடை: தானுடை. 15 நேமி. 16 யான்சுடர்: வானமே. [சஉ] 5 வேய்ந்தவா. 6 ழகிற்புகை. 7 யுடைய. 11 தூப: தோய. 11-12 தூப மாறுமேற். 12 நாறுமாற். 15 பகரல்: பகர்தல். 16 வேண்டுமே. [ச௩] சரு-ன் பின். 3 குதலைக். 4 கோதையாழ். 5-9 மழலையங் கிண்கிணி மகர யாழினி லெழுமிசை: மழலைசெய் மகரயாழ் மயங்கி யெங்கணு மெழு மிசை: மழலைசெய் மகரயாழ் வயங்கி யெங்கணு மெழிலிசை. 5 மழலைய. 6. குழலிசை: குரலியர். 7-8 மயங்கு மெங்கணும். 9 எழிலுடை. 10 யேழைய. 12 லவ்விசை. [சச] 6 யெற்றுவ. 7 வேடர்: வேட்ட: வேட்கு. 7-8 வேட்கு மந்தணர். 8 மைந்தர்கள். 10 பயில்விடங். 13 சுண்ணகக். 15 தொடரத். 16 தூர்ப்பன. [சரு - ருரு] வைப்பு முறை: சரு, சகூ, சக, ரு0, சஅ, ருக - ருச, சஎ, ருரு. [சரு]. 1-2 பந்தினை யிளையவர். 5 சிந்துவ: சிந்திய. 5-6 சிந்துர முகத்தின. 9-11 அந்தமி லகலய ரார்த்த. 11 ரகற்று: ரயர்த்த: ராற்று: ரார்த்த. 14-16 னொளிகெடத் தழைப்ப தண்ணிலா. 16 ழைக்குமே.

சசு. அரங்கிடை மடந்தைய ராடு வாரவர்
கருங்கடைக் கண்ணிணை காமர் நெஞ்சினை
யுருங்குவ மற்றவ ருயிர்க ளன்னவர்
மருங்குல்போற் றேய்வன வளர்வ தாசையே. 138

சஎ. பொழிவன சோலைகள் புதிய தேன்சில
விழைவன தென்றலு மிஞிறு மெல்லென
நுழைவன வன்னவை நுழைய நோவொடுங்
குழைவன பிரிந்தவர் கொதிக்குங் கொங்கையே. 139

சஅ. இறங்குவ மகரயா ழெடுத்த வின்னிசை
நிறங்கிளர் பாடல்போய் நிமிர்வ தவ்வழிக்
கறங்குவ வள்விசி கருவி கண்முகிழ்த்
துறங்குவ மகளிரோ டோதுங் கிள்ளையே. 140

சகூ. குழுதவரிச் சிலைநுதற் கொவ்வை வாய்ச்சியர்
பதயுகத் தொழில்கொடு பழிப்பி லாதன
ததைமலர்த் தாமரை யன்ன தாளினால்
உதைபடச் சிவப்பன வரவுத் தோள்களே. 141

ருO. பொழுதுணர் வரியவப் பொருவின் மாநகர்த்
தொழுதகை மடந்தையர் சுடர்வி ளக்கெனப்
பழுதறு மேனியைப் பார்க்கு மாசைகொல்
எழுதுசித் திரங்களு மிமைப்பி லாதவே. 142

ருக. தணிமலர்த் திருமக டயங்கு மாளிகை
இணரொளி பரப்பிநின் றிருடு ரப்பன
திணிசுடர் நெய்யுடைத் திருவி ளக்கமோ
மணிவிளக் கல்லன மகளிர் மேனியே. 143

[சசு] சஎ-ன் பின். 1 அரங்கிசை. 4 வாரிசை. 6 கண்ணினிற்: கண்மலர்: கண்ணயில். 7 காம. 9 யொருங்குவ: யுருக்குவ: யுருங்குறு. 13 மருங்குபோற். [சஎ *] 5 விளைவன. 6 வென்றலு: தேன்களு. 7 ஞிமிறு. 8 வில்லென். 11 நுழைவ: நுழையு. 12 நோவொடு:நொவ்வொடுங்:நோயொடு. 14 மாதர்தங்: தணந்தவர். 16 கொள்கையே. [சஅ] ருO-ன் பின். 1 இரங்குறு: இரங்குவ. 6-8 பாடலா னிமிர்வ வவ்வழி. 6 பாடலின்: பாடலார். 7 நிமிர்ந்த. 8 தவ்வழி. 10 வள்விசிக். 11 கருவிக். 12 கண்ணிமிழ்த். 15 டொதுங்கு. [சகூ] 5-6 பதவுகைத் தொழில்கொடு: பதையுகத் தெழில்கொடு: பதயுகத் தெழில்கெடப்: பதவுகத் தொழிலொடு. 6 தொழில்கெடப். 14 சிவந்தன. [ருO] 2 வரியன. 4 மாணகர்த்: மானகர்த். 9 பழுதற: 12 மாசையால். 13-16 எழுதிய சித்திர மிமைக்கி லாதன: எழுதிய சித்திர மிமைக்கி லாதவே. 15 மிமைக்கி. 16 லாதன. [ருக] ருச-ன் பின்: ருரு-ன் பின். 3 டங்கு. 11 தீவி. 11-12 திரியி னேங்கிய.

௫௨. பதங்களிற் றண்ணுமைப் பாணி பண்ணுற
விதங்களின் விதிமுறை சதிமி திப்பவர்
மதங்கிய ரச்சதி வகுத்துக் காட்டுவ
சதங்கைக ளல்லன புரவித் தார்களே. 144

௫௩. முளைப்பன முறுவலம் முறுவல் வெந்துயர்
விளைப்பன வன்றியு மெலிந்து நாடொறும்
இளைப்பன நுண்ணிடை யிளைப்ப மென்முலை
திளைப்பன முத்தொடு செம்பொ ணாரமே. 145

௫௪. இடையிடை யெங்கணுங் களிய ரூதன
நடையிள வன்னங்க ளளின நீர்க்கயல்
பெடையிள வண்டுகள் பிரச மாந்திடுங்
கடகரி யல்லன மகளிர் கண்களே. 146

௫௫. தழல்விழி யாளியுந் துணையுந் தாழ்வரை
முழைவிழை கிரிநிகர் களிற்றின் மும்மத
மழைவிழும் விழுந்தொறு மண்ணுங் கீழுறக்
குழைவுறு மதில்விழுங் கொடித்திண் டேர்களே. 147

௫௬. ஆடுவாம் புரவியின் குரத்தை யார்ப்பன
சூடுவா ரிகந்தவத் தொங்கன் மாலைகள்
ஓடுவா ரிழுக்குவ தூட லூடுறக்
கூடுவார் வனமுலை கொழித்த சாந்தமே. 148

௫௭. இளைப்பருங் குரங்களா லிவுளி பாரினைக்
கிளைப்பன வவ்வழிக் கிளர்ந்த தாளியின்
ஒளிப்பன மணியவை யொளிர மீதுதேன்
துளிப்பன குமரர்தந் தோளின் மாலையே. 149

[௫௨] ௫௦-ன் பின். 2 றண்ணுமை. 3 பாணிப். 7 சதிவி. 9-10 மதங்கியர்க் கச்சதி. 12 காட்டுவோர். 16 தாள்களே. [௫௩] 7 மேனி. 12-14 முத்தொடு திளைப்பன மென்முலைச். 14 முத்தெனச். [௫௪] ௫௧-ன் பின்: ௫௫-ன் பின். 4 ரூதென. 5 நடையின. 8 நீத்தன: நற்கயல்: நீர்த்தயல். 11-12 பிரசம் வாக்கிடங். 12 மார்த்திடுங்: மாந்திடம்: மாக்கடம்: மார்ந்திடுங்: மாலைகள். [௫௫] 1 சுழல்விழி. 2-3 யாளியின் றுணையின். 4 தாழ்ந்தவம். 5 முழைவினை. 5-8 முழைவரை நிகர்களிற் றினமு மும்மத. 6 கிரிநகர். 9-10 மழைவிழ விழுதொறு. 12-13 கீளுறு குழிவிழு. 13 குழைவிழு. 14 மவல்விழுங்: மவில்விழுங். [௫௬] 1 ஆடுவோர். 2 புரவிய. 1-3 ஆடுவார் பொருவினு புரத்தை. 3-4 குரங்க ளார்ப்பன: குரத்த சைப்பன. 6 ரிகழ்ந்தவத். 10-11 ரிழுக்குவா ரூட. 11 லூட. 12 லூட்டுறக்: லூட்டறக். 14 வனமுலைக். 15 கொதிக்குஞ்: கொதித்த. [௫௭] 3-4 லிவுளித் தாரணிக். 4 தாரணி: தாதினைக். 6 வவ்வழி. 7 கிளைத்த: கிளர்த்த. 10 மணியிவை. 15 தொய்யில்: தொய்யல்.

ருஅ. விலக்கருங் கரிமதம் வேங்கை நாறுவ
குலக்கொடி மாதர்வாய் குமுத நாறுவ
கலக்கடை கணிப்பருங் கதிர்க ணாறுவ 150
மலர்க்கடி நாறுவ மகளிர் கூந்தலே.

ருகூ. அதிர்கழ லொலிப்பன வயிலி மைப்பன
கதிர்மணி யிளவெயில் கால்வ மான்மத
முதிர்வுறக் கமழ்வன முத்த மின்னுவ 151
மதுகர மிசைப்பன மைந்த ரீட்டமே.

சுO. வளையொலி வயிரொலி மகர வீணையின்
கிளையொலி முழவொலி கின்ன ரத்தொலி
துளையொலி பல்லியந் துவைக்குஞ் சும்மையின்
விளையொலி கடலொலி மெலிய விம்முமே. 152

சுக. கோவையி னிகரெனக் குறிக்க லாதவத்
தேவர்தந் நகரியைச் செப்பு கின்றதென்
யாவையும் வழங்கிடத் திகலி யிந்நகர்
ஆவணங் கண்டபி னளகை தோற்றதே. 153

சுஉ. மன்னவர் தருதிறை யளக்கு மண்டபம்
அன்னமென் னடையவ ராடு மண்டபம்
பன்னருங் கலைதெரி பட்டி மண்டப
முன்னரு மருமறை யோது மண்டபம். 154

சுரு. இரவியிற் சுடர்மணி யிமைக்குந் தோரணத்
தெருவினிற் சிறியன திசைகள் சேண்விளங்
கருவியிற் பெரியன வானைத் தானங்கள்
பரவையிற் பெரியன புரவிப் பந்தியே. 155

[ருஅ] 6 மகளிர்வாய்: மடந்தைவாய். 10 தணிப்பருங்: நணிவருங்: களிப்பருங். 13 மலர்க்கடை. 2-வது 3-வது அடிகள் தம்முள் மாறியுள்ளன. [ருகூ] 2 விமைப்பன. 6 யணிவெயில். 7 கால. 8 மாமத. 11 முத்து. 14 மிரைப்பன: மிமைப்பன: மொய்ப்பன. [சுO] 6 குழலொலி. 12 (ந்)தோலிடை. [சுக] ருஅ-ன் பின்: ருகூ-ன் பின். 1-2 கோவையின் னிகரொடெண்: கோவையை நிகரெனக்: கோவினின் னகரொடெண்: கோவையிந் நகரொடெண்: கோவையுந் தாரொடு. 2 னதனொடெண்: னிதனொடெண். 3 குறிக்கி. 3-4 குறிக்கி லாதன. 5 தேவர்பேர். 10 விளங்கிடத். 10-11 வெட்கிட விகலி: வெள்கிட விகலி. 12 நன்னகர்: னிந்நகர்: லிந்நகர்: யந்நகர்: நீணகர்: லந்நகர். [சுஉ] 1-2 மன்னவ ரருந்திறை. 2 வரு(ந்)திறை. 6 னடையின. 7 ராடல். 15 முழக்கு. 3-வது 4-வது அடிகள் தம்முள் மாறியுள்ளன: 2-வது 4-வது அடிகள் தம்முள் மாறியுள்ளன. [சுரு] 4 தோரணந். 6 செறிவன: பெரியன. 15 குதிரைப்.

௬௪. சூளிகை மழைமுகி றுடைக்குந் தோரண
மாளிகை மலர்வன மகளிர் வாண்முகம்
வாளிக ளன்னவை மலர்வ மற்றவை
யாளிக ளன்னவர் நிறத்தி னூழ்பவே. 156

௬௫. மன்னவர் கழலொடு மாறு கொள்வன
பொன்னணித் தேரொலி புரவித் தாரொலி
இன்னகை யவர்சிலம் பேங்க வேங்குவ
கன்னியர் குடைதுறைக் களக வன்னமே. 157

௬௬. ஊடவுங் கூடவு முயிரி னின்னிசை
பாடவும் விறலியர் பாடல் கேட்கவும்
ஆடவு மகன்புன லாடி யாய்மலர்
சூடவும் பொழுதுபோஞ் சிலர்க்கத் தொன்னகர். 158

௬௭. முழங்குதிண் கடகரி முன்பி னூரவும்
எழுங்குரத் திவுளியோ டிரத மேறவும்
பழங்கணோ டிரந்தவர் பரிவு தீர்தர
வழங்கவும் பொழுதுபோஞ் சிலர்க்கம் மாநகர். 159

௬௮. கரியொடு கரியெதிர் பொருத்திக் கைப்படை
வரிசிலை முதலிய வழங்கி வாளுளைப்
புரவியிற் பொருவில்செண் டாடிப் போர்க்கலை
தெரிதலிற் பொழுதுபோஞ் சிலர்க்கச் சேணகர். 160

௬௯. நந்தன வனத்தலர் கொய்து நவ்விபோல்
வந்திளை யவரொடும் வாவி யாடிவாய்ச்
செந்துவ ரழிதரத் தேறன் மாந்திச்சூ
துந்தலிற் பொழுதுபோஞ் சிலர்க்கவ் வொண்ணகர். 161

௭௦. நாறு விதமா நளிர்மாதிர வீதி யோடி
மீறுறு வேலைப் புனல்வெண்முகி லுண்ணு மாபோல்

[௬௪ *] 2 மழைமுகிற். 3 றுடைக்குந். 7 மாதர். 8 வான்முகம். 10 ளனவரை: ளனவிழி: ளனவவை. 11 மலர. 12 மற்றிவை. 13-14 ஆளி யை யன்னவர். 14 ளனவவை. 15 புயத்தி. 16 லாழ்பவே. [௬௫] ௬௭-ன் பின்: ௬௩-ன் பின். 2 கழலொலி. 5 பொன்னணி. 9 இன்னவை. 12 வேங்குமக். 15 கமல: கனக. [௬௬] 8 கேட்பவும். 10 (ந்)தண்புன. 12 (த்)தேமலர்: யம் மலர். 15 சிலர்க்குத். [௬௭] 1 முழங்குவெங். 3 மொய்ம்பி: மொய்யி. 8 மேற் பவும். 10 டிரந்தவப். 15 சிலர்க்கு. 16 மாணகர். [௬௮] 1 கரியொரு. 2 கரி யெதிர்ப். 3 பொருதக். 6-8 நுதலியர் வழங்கு வாளுளைப். 13 தெரியவும். 15-16 சிலர்க்க வொண்ணகர். 15 சிலர்க்குஞ்:சிலர்க்கண்:சிலர்க்குச். 16 செந் நகர். [௬௯ *] 6 யவரொடு. 8 யாடிப்போய்ச். 9-10 செந்துவ ரிழிதரத்: செந் துவர் வழிதரத். 12 மாந்தித்தூ. 13 துந்தவும். 14 போதுபோஞ். 16 சிலர்க்கு. [௭௦] 2 விதமாய். 3 நணிமாதிர: நளிமாதிர: நனிமாதிர. 8 புனல்விண் முகி. 10 மாப்போல்.

ஆனாத மாடத் திடையாடு கொடிகண் மீப்போய்
வானாறு நண்ணிப் புனல்வற்றிட நக்கு மன்னோ. 162

எக. வன்றோல் புணர்ந்த மணிவாயிலும் வானி னும்பர்ச
சென்றோங்கி மேலோ ரிடமில்லெனச் செம்பொ னிஞ்சி
குன்றோங்கு தோளார் குணங்கூட்டிசைக் குப்பை யென்ன
ஒன்றோ டிரண்டு முயர்ந்தோங்கின வோங்கல் நாண. 163

எஉ. காடும் புனமுங் கடலன்ன கிடங்கு மாதர்
ஆடுங் குளனு மருவிச்சுனைக் குன்று மும்பர்
வீடும் விரவும் மணிப்பந்தரும் வீணை வண்டு
பாடும் பொழிலும் பலநல்லறப் பள்ளி மன்னோ. 164

எந. தெள்வார் மழையுந் திரையாழியு முட்க நாளும்
வள்வார் முரச மதிர்மாநகர் வாழு மாக்கள்
கள்வா ரிலாமைப் பொருட்காவலு மில்லை யாருங்
கொள்வா ரிலாமைக் கொடுப்பார்களு மில்லை மன்னோ. 165

எச. கல்லாது நிற்பார் பிறரின்மையிற் கல்வி முற்ற
வல்லாரு மில்லை யவைவல்லரல் லாரு மில்லை
எல்லாரு மெல்லாப் பெருஞ்செல்வமு மெய்த லாலே
இல்லாரு மில்லை யுடையார்களு மில்லை மாதோ. 166

எரு. ஏகம் முதற்கல்வி முளைத்தெழுந் தெண்ணில் கேள்வி
ஆகும் முதற்றிண் பணைபோக்கி யருந்த வத்தின்
சாகந் தழைத்தன் பரும்பித்தரு மம்ம லர்ந்து
போகங் கனியொன்று பழுத்தது போலு மன்றே. 167

நகரப்படலம் முற்றும்.

13 திடையோடு. 14 கொடிக்கண். 17 கண்ணிப். 20 மன்றே. [எக] 1 வன்றோள். 1-5 வன்றோ ரணம்புரை வாயினும் வானி லும்போய்ச். 1-3 வன்றோ ரணங்கள் புணர்வாயிலும்: வன்றோ ரணம்புணர் வாயிலும். 2 புணர்த்த: புனைந்த. 3 முனிவாயிலும்: முனிவானினும். 4-5 வாயி லும்புர்ச். 5 னூடு. 6. சென்றோங்கு: சென்றுங்கு. 8 ரிடையில்லெனச். 9 செய்பொ. 12 தோளான். 13 குணங்கூட்டிசைக். 18 முயர்ந்தோங்கிய. 19 வும்பர். [எஉ] எந-ன் பின். 2 புனலுங். 12 மருவும்: விராவும்: விரியும். 13 மணப்பந்தரும்: மணற்பந்தரும். 14 தேனும். 15 வண்டும். 18 முளநன்மலர்ப்: பலநன் மலர்ப்: பலபல்லவப்: மலர்ப் பல்லவப்: நறும்பன்மலர்ப்: முளநல்லறப்: மல நல்லறப். [எந] 2 முகிலுங். 3 திரைவாரியு: திசையாழியு. 8 மதிர்மாணகர். 12 ரிலாமற். 13-15 பொருள்காவல்செய் வாரு மில்லைக். 17 ரிலாமற். 20 மாதோ. [எச] 5 முற்றி. 8-9 யவைவல்லவ ராரு. 20 மன்னோ. [எரு] 6-7 யாகம் முரட்டிண், 7 முதற்றண்: மதர்த்திண்: முதற்பல். 8 பணை யோக்கி. 18 பருத்தது. 19-20 போன்ற தன்றே.

## ச. அரசியற் படலம்

க. அம்மா ணகருக் கரசன்னர சர்க்க ரைசன்
செம்மாண் டனிக்கோ னுலகேழினுஞ் செல்ல நின்றான்
இம்மாண் கதைக்கோ ரிறையாய விராம னென்னும்
மொய்ம்மாண் கழலோற் றருநல்லற மூர்த்தி யன்னான். 168

உ. ஆதிம் மதியும் மருளும்மற னும்ம மைவும்
ஏதின் மிடல்வீ ரமுமீகையு மெண்ணும் யாவும்
நீதிந் நிலையும் மிவைநேமியி னோர்க்கு நின்ற
பாதிம் முழுதும் மிவற்கேபணி கேட்ப மன்னோ. 169

ந. மொய்யார் கலிசூழ் முதுபாரின் முகந்த தானக்
கையார் புனலா னனையாதன கையு மில்லை
மெய்யாய வேதத் துறைவேந்தருக் கேய்ந்த யாரும்
செய்யாத யாக மிவன்செய்து மறந்த மாதோ. 170

ச. தாயொக்கு மன்பிற் றவமொக்கு நலம்ப யப்பிற்
சேயொக்கு முன்னின் றருசெல்கதி யுய்க்கு நீரான்
நோயொக்கு மென்னின் மருந்தொக்கு நுணங்கு கேள்வி
ஆயப் புகுங்கா லறிவொக்கு மெவர்க்கு மன்னன். 171

ரு. ஈந்தே கடந்தா னிரப்போர்கட லெண்ணி னுண்ணூல்
ஆய்ந்தே கடந்தா னறிவென்னு மளக்கர் வாளாற்

சில பிரதிகளில் இப்படலம் நகரப்படலத்தோடு சேர்ந்துள்ளது. [க] வேறு சிலவற்றில் திருவவதாரப் படலம் இங்கே தொடங்குகிறது. 2 நகருக். 3 கிறைவன்னர. 3-5 கரசர்க்கர சாகி நின்றான். 4-5 சர்க்கி ராசன்: சர்க்க ரசன். 6-7 செம்மான் றனிக்கோ. 11-12 இம்மா நகர்க்கோ. [உ] 1 ஆதி. 2 மறையும். 5 மையும். 6-7 ஏதில் வடல்வீ: ஏதம் மிலவீ: ஏதி விறல்வீ. 9 மெண்ணில்: மெண்ணி. 9-10 மெண்ணி லாய்வும். 10 யாப்பு(ம்) 11 நீதி. 12 நெறியும். 16 பாதி. 19 கேட்கு. [ந] 2 கலியின். 4 முகந்து. 12-13 வேத முறைவேந்தருக். 15 யாதும்: யாவும். 18 மவன் செய்து. 19 மகிழ்ந்த: முடித்த: சிறந்த. [ச] சில பிரதிகளில் இப்பாடலோடு நகரப்படலம் முடிய, அடுத்த செய்யுளோடு திருவவதாரப் படலம் தொடங்குகிறது. 4 நயம்ப. 8 றருஞ்செல்கதி. 11-12 நோயுற்றதென்னின். 20 மன்னோ. [ரு] சில பிரதிகளில் இச் செய்யுளோடு நகரப்படலம் முற்றும். 5 னன்னூல்: நன்னூல்: நுண்ணூல். 7-8 கடந்தான் கலையென்னு.

காய்ந்தே கடந்தான் பகைவேலை கருத்து முற்றத்
தோய்ந்தே கடந்தான் திருவிற்றொடர் போக பௌவம். 172

வேறு

சு. வெள்ளமும் பறவையும் விலங்கும் வேசையர்
உள்ளமு மொருவழி யோட நின்றவன்
தள்ளரும் பெரும்புகழ்த் தசர தப்பெயர்
வள்ளல்வள் ளுறையயின் மன்னர் மன்னனே. 173

எ. நேமிமால் வரைமதி லாக நீள்புறப்
பாமமா கடல்கிடங் காகப் பன்மணி
வாமமா ளிகைமலை யாக மன்னற்குப்
பூமியு மயோத்திமா நகரம் போன்றதே. 174

அ. யாவதும் வன்மைநே ரெறிந்து தீட்டலால்
மேவருங் கையடை வேலுந் தேயுமாற்
கோவுடை நெடுமணி மகுட கோடியாற்
சேவடி யடைந்தபொற் கழலுந் தேயுமால். 175

கூ. மண்ணிடை யுயிர்தொறும் வளர்ந்து தேய்வின்றித்
தண்ணிழல் பரப்பவு மிருளைத் தள்ளவும்
அண்ணறன் குடைமதி யமையு மாதலான்
விண்ணிடை மதியினை மிகையி தென்பவே. 176

க0. வயிரவான் பூணணி மடங்கன் மொய்ம்பினன்
உயிரெலாந் தன்னுயி ரொப்ப வோம்பலாற்
செயிரிலா வுலகினிற் சென்று நின்றுவாழ்
உயிரெலா முறைவதோ ருடம்பு மாயினன். 177

15 முற்றித். 18 திருவின்றொடர்ப்: திருவின்றொடர்: திருவின்னுயர்: திருவிண்டொடர். [சு] சில பிரதிகளில் இங்கே திருவவதாரப்படலம் தொடங்குகின்றது. வேறு சிலவற்றில் சு-முதல் சுஉ-வரையுள்ளன அரசியற்படலமென்று குறிக்கப்பட்டுள. 4 வேசியர். 8 நின்றன: நின்றவால். 10 பெருங்குணத். 11 தயர. [எ] அ-ன் பின். 4 நீள்புறம். 5 பாமமார். 12 மன்னர்க்குப். 14 மயோத்தியும். 16 போலுமால்: போலுமே. [அ] 1 யாவரும்: எவரும். 1-3 ஆரும் வன்மைநே ரறிந்து. 2 வன்மநே: வண்மைநே. 6 கையிடை: கரத்திடை. 14 யணிந்தபொற்: யடைந்துபொற். 16 தேயுமே. [கூ] 10 மதிக்குடை. 10-11 குடையத னமையு. 14 மதியினு. 16 தென்னவே. [க0] 2 பூணினன். 6 தனதுயி. 7 ரொக்க. 14 முறுவதோ.

கக. குன்றென வுயரிய குவவுத் தோளினன்
வென்றியந் திகிரிவெம் பரிதி யாமென
ஒன்றென வுலகிடை யுலாவி மீமிசை
நின்றுநின் றுயிர்தொறு நெடிது காக்குமே. 178

கஉ. எய்யென வெழுபகை யெங்கு மின்மையான்
மொய்பொரு தினவுறு முழவுத் தோளினன்
வையக முழுவதும் வறிஞ னோம்புமோர்
செய்யெனக் காத்தினி தரசு செய்யுமால். 179

அரசியற்படலம் முற்றும்.

---

## ரு. திருவவதாரப் படலம்

க. ஆயவ னொருபக லயனை யேகிநீர்
தூயமா முனிவனைத் தொழுது தொல்குலத்
தாயருந் தந்தையுந் தவமு மன்பினன்
மேயவான் கடவுளும் பிறவும் வேறு நீ. 180

உ. எங்குலத் தலைவர்க ளிரவி தன்னினுந்
தங்குலம் விளங்குறத் தரணி தாங்கினர்
மங்குந ரில்லென வரம்பில் வையகம்
எங்குநின் னருளினு லினிதி னோம்பினேன். 181

ரு. அறுபதி னாயிர மாண்டு மாண்டுற
உறுபகை யொடுக்கியிவ் வுலகங் காத்துளேன்

[கக] 5-6 வென்றிவெங் திகிரியம். 7 பருதி. 9 ஒன்றிய. 10-11 வுலகிசை யுலாவு: வுணரினு முலாவி. 13-14 நின்றுபல் லுயிர்தொறு. [கஉ] 2 வெழும்பகை: வெழுவகை. 5 மொய்பொரு: மொய்பெருத். 5-6 மொய்பெரு தெனவுறு. 11 வறிய. 15 யரசு. 16 செய்கின்றான்.

[க] 6-7 முனிவாற் றொழுது. 8 தொல்குணத். 13 மேயவன். [உ] 11 திறைவர்க. 6 விளங்கிடத்: விலங்குறத்: விளக்குறக். 10 ரிலரென. 11 வரம்பின். 13 இங்குநின். 13-14 இங்குன தருளினு. 16 னோம்பினன். [ரு] 2-3 னாயிரத் தாண்டு. 6 யடக்கியிவ். 7-8 வுலகங் காத்தனன்: வுலகை யோம்பினேன்: வுலக மோம்பினேன்.

பிறிதொரு குறையிலை யெற்பின் வையகம்
மறுகுறு மென்பதோர் மறுக்க முண்டரோ. 182

ச. அருந்தவ முனிவரு மந்த ணாளரும்
வருந்துத லின்றியே வாழ்வின் வைகினர்
இருந்துய ருழக்குவ ரெற்பி னென்பதோர்
அருந்துயர் வருத்துமென் னகத்தை யென்றனன். 183

ரு. முரசறை செழுங்கடை முத்த மாமுடி
அரசர்தங் கோமக னனைய கூறலும்
விரைசெறி கமலமென் பொகுட்டு மேவிய
வரசரோ ருகன்மகன் மனத்தி னெண்ணினன். 184

சு. அலைகட னடுவணோ ரனந்தன் மீமிசை
மலையென விழிதுயில் வளரு மாமுகில்
கொலைதொழி லரக்கர்தங் கொடுமை தீர்ப்பனென்
றலைவுறு மமரருக் குரைத்த வாய்மையை. 185

எ. சுடுதொழி லரக்கராற் றொலைந்து வானுளோர்
கடுவமர் களனடி கலந்து கூறலும்
படுபொரு ளுணர்ந்தவப் பரமன் யாமினி
அடுகில மெனமறுத் தவரொ டேகினன். 186

9 இறையொரு. 11 யென்பின். 13-14 மறுகுவ தென்பதோர்: மறுகுவ துண்டெனு: மறுகுவ னென்பதோர். 15 மயக்க. [ச] 1-4 இருந் தவ முனிவரு மேனை யோர்களும். 5-6 வருந்துய ரின்றியே. 9 பெருந்துய. 10 ருழக்குந. 14 வருத்தவென். [ரு] 1 முரசெறி: முரசநற். 3 முற்ற. 5-7 அரசர்கோன் மகனினைங் கனைய. 9-12 உரைசெறி சராசர மனைத்து முந்திய. 11 பொருகுட்டின். 14 ருகன்றன. 16 லெண்ணினன். [சு] 3 ரமளி. 12 தீர்ப்பலென். 16 வாய்மையே. [எ]6 களனடிக். 10 ளுணர்த் தவப். 12-14 யானினி யடுகில னெனமறுத். 13-14 அடுவதில் லெனமறுத்.

186 (i) கறைமிடற் றிறைவனுங் கடவு ளோர்களு
மறைமுதற் கிழவனை வந்து நண்ணலு
முறைமையிற் கடன்முறை முற்றி முண்டகத்
திறைவனு மவருட னினிதி னேகினன்.

இச்செய்யுளுள்ள வோர் பிரதியில் அ, கூ-ம் செய்யுட்கள் தள்ளத் தக்கன வென்று குறிக்கப்பெற்றுள்ளன. 2 நண்ணலுங். 8 நண்ணினர். 11 முடித்து. 14-15 மவரொடு மினிதி. 16 ருந்தனன்.

அ. வடவரைக் குடுமியி னடுவண் மாசறு
சுடர்மணி மண்டபந் துன்னி நான்முகக்
கடவுளை யடிதொழு தமரர் கண்டகர்
இடிநிகர் வினையம தியம்பி னாரரோ. 187

கூ. பாகசா தனன்றனைப் பாசத் நார்த்தடல்
மேகநா தன்புகுந் திலங்கை மேயநாட்
போகமா மலருறை புனிதன் மீட்டமை
தோகைபா கற்குறச் சொல்லி னானரோ. 188

க௦. இருபது கரந்தலை யீரைந் தென்னுமத்
திருவிலி வலிக்கொரு செயலின் றெங்களாற்
கருமுகி லெனவளர் கருணை யங்கடல்
பொருதிடர் தணிக்கினுண் டெனும்பு னார்ப்பினார். 189

[அ] 3 னடுவுண். 11 தமர. 13 இடனிகழ்: இடர்நிகழ். 16 னாரரோ. [கூ] எ-ன் பின். 8 மேவுநாட்: யேகுநாட்: மேவினான். 11-16 புனித வொல்லையின் எகினீ மீட்டமை யியம்ப வேண்டுமோ. 12 மீண்டமை. 16 னாரரோ. [க௦] 14-15 தணிக்குவ னெனும்பு. 16 னார்ப்பினால்: னார்ப் பினான்.

188 (i) என்றவ ரினிமைக ளியம்பி யெங்கணுங்
கன்றிய நிருதரை யழித்துக் காத்தியேல்
ஒன்றிய வுலகமு முயிர்கள் யாவையும்
இன்றுநீ படைத்தியென் றியம்பி னாரரோ.

187-ன் பின். 1-3 என்றினை யனபல வியம்பி. 6 வரக்கரை. 10-11 வுயிர்களு முலகி. 15-16 றிசைத்துப் பின்னரும்.

189 (i) காத்தியே யென்றெமைக் காக்க லார்தமை
யேத்தியே யிளைத்தன மெண்ணி னான்மறைப்
பாத்தியே பாற்கடற் பள்ளி மேவிய
மூர்த்தியே முதலவ முகிலின் மேனியாய்.

191-ன் பின். 7 மெழிலி. 7-8 மெழுக நான்மறைப். 14-16 முகினிற முதல்வ னேயென.

189 (i) காத்தி யேயென் றெமைக்காக்க லார்தமை
யேத்தி யேயிளைத் தோமெழு நான்மறைப்
பாத்தி யேதிருப் பாற்கடன் மேவிய
மூர்த்தி யேமுதல் வாமுகின் மேனியாய்.

7 தோமெழில்.

கக. திரைகெழு பயோததித் துயிலுந் தெய்வவான்
மரகத மலையினை வழுத்தி நெஞ்சினுற்
கரகம லங்குவித் திருந்த காலையிற்
பரகதி யுணர்ந்தவர்க் குதவும் பண்ணவன். 190

கஉ. கருமுகி ருமரைக் காடு பூத்தோரீ
டிருசுட ரிருபுறத் தேந்தி யேடவிழ்
திருவொடும் பொலியவோர் செம்பொற் குன்றின்மேல்
வருவபோற் கலுழன்மேல் வந்து தோன்றினன். 191

கங. எழுந்தனர் கறைமிடற் றிறையுந் தாமரைச்
செழுந்தவி சுகந்தவத் தேவுஞ் சென்றெதிர்
விழுந்தன ரடிமிசை விண்ணு ளோரொடுந்
தொழுந்தொறுந் தொழுந்தொறுங் களிது ளங்குவார். 192

கச. ஆடினர் பாடின ரங்கு மிங்குமாய்
ஓடின ருவகைமா நறவுண் டோர்கிலார்
வீடின ரரக்கரென் றுவக்கும் விம்மலாற்
சூடினர் முறைமுறை துளவத் தாண்மலர். 193

கரு. பொன்வரை யிழிவதோர் புயலின் பொற்புற
என்னையா ளுடையவன் றேணின் றெம்பிரான்
சென்னிவான் றடவுமண் டபத்திற் சேர்ந்தரி
துன்னுபொற் பீடமேற் பொலிந்து தோன்றினன். 194

கசு. விதியொடு முனிவரும் விண்ணு ளோர்களும்
மதிவளர் சடைமுடி மழுவ லாளனும்
அதிசய முடனுவந் தயலி ருந்துழிக்
கொதிகொள்வே லரக்கர்தங் கொடுமை கூறினர். 195

[கக] 7-8 வழுத்து நெஞ்சினர். 8 நெஞ்சுறத். 11 திருக்குங். 15 குதவு: குணரும். [கஉ] 8 யேந்திய: யேந்தலர்த்: யேடலர்த். 12 குன்றிலே: குன்றின்மீ. 14 கருடன்மேல். [கங] 1 எழுந்தனன்: எழுந்திலன். 2-3 கடவுளர்க் கிறையுங். 2-4 கடகளிற் றிறையு மேடவிழ். 3 றிறைவன். 3-4 றிறையு மேடவிழ். 6 சிருந்தவத்: சுவந்தவத். 10 னவனடி: னடிமிசை. 12 ளோரெலாங்: ளோர்களுங். 15-16 களிது லங்குவார்: களிது டங்குவார். [கச] 4 மிங்குமா. 6 ருவகையா. 10 னரக்கரெனன். 12 விம்மலார். 14 வானவர். 15 துளபத்: துளவங். [கரு] 1 பொன்மலை. 2 யழிவதோர். 3-4 புயற்புள் ளின்புறம். 7 றெழுமின். 10-11 றடவு மண்டபத்துச். [கசு] 5 மதிதரு: மதிதவழ்: மதிவரு. 12 ருந்தனர்: ருந்துழீஇக். 16 கூறுவார்.

கஎ. ஐயிரு தலையினோ னனுச ராதியா
மெய்வலி யரக்கரால் விண்ணு மண்ணுமே
செய்தவ மிழந்தன திருவி னாயக
உய்திற மில்லையென் றுயிர்ப்பு வீங்கினார். 196

கஅ. எங்கணீள் வரங்களா லரக்க ரென்றுளார்
பொங்குமூ வுலகையும் புடைத்த ழித்தனர்
செங்கணா யகவினித் தீர்த்தி யில்லையேல்
றுங்குவ ருலகெலா நொடியி னென்றனர். 197

கக. என்றன ரிடருழந் திறைஞ்சி யேத்தலும்
மன்றலந் துளவினான் வருந்தல் வஞ்சகர்
தந்தலை யறுத்திடர் தணிப்பன் றாணிக்
கொன்றுநீர் கேண்மினென் றுணர்த்தன் மேயினான். 198

உ0. வானுளோ ரனைவரும் வான ரங்களாய்க்
கானினும் வரையினுங் கடித டத்தினுஞ்
சேனையோ டவதரித் திடுமின் சென்றென
ஆனன மலர்ந்தன னருளி னாழியான். 199

உக. மகரத மனையவர் வரமும் வாழ்வுமோர்
நிசரத கணைகளா னீறு செய்யயாம்
கசரத துரகமாக் கடல்கொள் காவலன்
தசரதன் மதலையாய் வருதுந் தாரணி. 200

[கஎ] 3 னனிச. 4 னாதியாம்: ராதியோர். 8 மண்ணுமேற்: மண்ணுமோர். 10 மழிந்தது: மிழந்தது: மிழந்தனம். [கஅ] 5 பொங்கிமூ. 8 ழித்துளார். 10 யதுவினித்: யகவிது. 11-12 தீர்த்த வில்லையேல். 12 யில்லையே. 14 ருலகையோர். 15-16 நொடிநி னென்றனன். 15 நொடிப்பி. 16 லென்றனர். [கக] 1-3 என்றபி னமரர்க ளிறைஞ்சி. 5 மன்றலர். 8-9 வஞ்சகன் தன்றலை. 11 தவிர்ப்பன். 14-15 கேண்மென வுணர்த்தன்: கேண்மென வுரைத்தன். [உ0] 6 மலையினுங். 7 கடித்த. [உக] 1 மயரத. 3 வாழும். 5 நிய ரத. 8 செய்யவாம். 9 கயரத. 10 துரகமாட். 13 தய[illegible]தன். 15 வருவன்.

196 (i) வானவ ரவ்வுரை வழங்க மாமதித்
தேனுறு மிதழியக் தெரியல் வேணியான்
ஆனவர் தமைக்கர மமைத்தங் கையனைத்
தான்முக நோக்கியே சாற்றன் மேயினான்.

2 ரம்முறை.

உஉ. வளையொடு திகிரியும் வடவை தீப்தர
விளைதரு கடுவுடை விரிகொள் பாயலும்
இளையர்க ளெனவடி பரவ வேகிநாம்
வளமதி லயோத்தியில் வருது மென்றனன். 201

உங. என்றவ னுரைத்தபோ தெழுந்து துள்ளினர்
நன்றிகொண் மங்கல நாதம் பாடினர்
மன்றலஞ் செழுந்துள வணியு மாயனர்
இன்றெமை யளித்தன ரென்னு மேம்பலால். 202

வேறு

உச. போயதெம் பொருும லென்று விந்திர னுவகை பூத்தான்
தூயமா மலரு ளோனுஞ் சுடர்மதி சூடி னோனுஞ்
சேயுயர் விசும்பி னோருந் தீர்ந்ததெஞ் சிறுமை யென்றார்
மாயிரு ஞால முண்டோன் கலுழன்மேற் சரணம் வைத்தான்.

உரு. என்னையா ளுடைய வையன் கலுழன்மே லெழுந்து போய
பின்னர்வா னவரை நோக்கிப் பிதாமகன் பேசு கின்றான்
முன்னரே யெண்கின் வேந்தன் யானென முடுகி னன்மற்
றன்னவா றெவரு நீர்போ யவதரித் திடுமி னென்றான். 204

உசு. தருவுடைக் கடவுள் வேந்தன் சாற்றுவா னெனது கூறு
மருவலர்க் கசனி யன்ன வாலியு மகனு மென்ன
இரவிமற் றெனது கூறங் கவற்கிளை யவனென் றோத
அரியுமற் றெனது கூறு நீலனென் றறைந்திட் டானல். 205

[உஉ] 4 தீர்தர: தீதர. 3-4 வடவைத் தீங்கர்: வடவைத் தீதர: வடவைத் தீயென: வடவைத் தீத்தரு: வடவைத் தீத்தர. 9 இளைஞர்க: 9-10 இளையவ ரெனவடி. 12 வேகியாம்: வெய்தியாம்: வெய்திநாம்: வேகினும். [உங] 7 நாமம். 9 மன்றலர்: மன்றலார். 9-11 மன்றலங் துளவினு னணியு. 9-11 மன்றலங் துளவணி யணியு. 12 மாயவன்: மார்பினர். 15 னென்னு. [உச] 7 தூயமான். 10-12 (ங்)துறவுறை முனிவர் தாமும். 13 சேயிரு. 14-15 விசும்புளோருங். 16 நீர்ந்ததெஞ். 21 முண்டான். 22 கருடன்மேற். [உரு] 4-5 கலுழன்மீ தெழுந்து. 7 பின்னைவா. 13 முன்னமே. 17-18 மொழிகின் றான்மற். 18 னேன்மற். 19-20 றன்னவ ரெவரு. [உசு] 1 தருபுடை: திருவுடை. 2 கடல்கொள். 2-3 கடவு ளோனுஞ். 4 செப்புவா. 9 யென்ன. 12 முன்ன: மென்றான். 13-18 இரவிசுக் கிரீவன் யானே யென்றெதிர் நின்றே யோத. 15 கூறும். 15-16 கூறிங் கிவற்கிளை: கூறு மவற்கிளை. 17 யானென்: யோனென். 19 எரியுமற். 21 கூறும்.

௨௭. வாயுமற் றெனது கூறு மாருதி யெனனு மற்றோர்
காயுமர்க் கடங்க ளாகிக் காசினி யதனின் மீது
போயிடத் துணிந்தோ மென்றார் புராரிமற் றியானே வாத
சேயெனப் புகன்றான் மற்றைத் திசையுளோர்க் கவதியுண்டோ.

௨௮. அருடரு கமலக் கண்ண னருண்முறை யலரு ளோனும்
இருடரு மிடற்றி னோனு மமரரு மினைய ராகி
மருடரு வனத்தின் மண்ணின் வானர ராகி வந்தார்
பொருடரு மெவருந் தத்த முறைவிடஞ் சென்று புக்கார். 207

௨௯. ஈதுமுன் னிகழ்ந்த வண்ண மெனமுனி யிதயத் தெண்ணி
மாதிரம் பொருத திண்டோண் மன்னநீ வருந்த லேமேழ்
பூதல முழுதுந் தாங்கும் புதல்வரை யளிக்கும் வேள்வி
தீதற முயலி னைய சிந்தைநோய் தீரு மென்றான். 208

௩௦. என்னமா முனிவன் கூற வெழுந்துபே ருவகை பொங்க
மன்னவர் மன்ன னந்த மாமுனி சரணஞ் சூடி
உன்னையே புகல்புக் கேனுக் குறுகண்வந் தடைவ துண்டோ
அன்னதற் கடியேன் செய்யும் பணியினி தளித்தி யென்றான்.

௩௧. மாசறு சுரர்க ளோடு மற்றுளோர் தமையு மீன்ற
காசிப னருளு மைந்தன் விபாண்டகன் கங்கை சூடும்

[௨௭] 5 யென்ன. 7 காயுமர். 12 மீதே. 14 துணிது. 16-18 புரமெரித் தவன்றான் காற்றின். 16-17 புராரியு மியானே. 17 றியானும். 18-22 யார்க்குந் தாயென வருள்வனென்றான் சார்ந்துளோர்க். 21 மற்றத். 22 திசையிலோர்க். [௨௮] 1 அருட்பெறு. 4-6 னரனுறை முறையிலாரும். 5 மலரு. 7 இருட்டரு. 8 மளமேலானு. 10-11 மினையரு மனைய. 11 மெனைய. 13 மருட்டரு. 14 மனத்தின். 15 மண்ணில். 17 மாகி. 19 பொருட்டரு. 20 மிருவர்: மவர்கள்: மிவர்கள்: மிறைவர்: மியாருந்: மி ருந்: முநவர். 21 தந்த. [௨௯] 8 பொருதுந்: பொருந்து. 14-15 முழுதுங் காக்கும்: முழுது மாளும். 20 முயற்றி. 21 லையா: லுன்றன். 23 தீர்து. [௩௦] 2 வசிட்டன். 4 வெழுந்தபே. 4-5 வெழுபெரு முவகை. 6 பொங்கி: யெய்தி. 9 (ன்) மிக்க. 14-16 புகலப் புக்கே னுறுகண்வந். 16-17 குறுதுய ரடைவ. 16-18 கிதின்வரு முறுதி யுண்டோ. 17 தடைந்த: துறுவ. 19 இன்னதற். 22 பண்ணியினை: பணிவிடை. 22-23 பணியென்கொ லளித்தி. 23 யளித்தி: யமைத்தி: யருடி. 23-24 யருளு கென்றான்: தியம்பு கென்றான். [௩௧] 2-3 சுரரி னோடு: சூரி னோடு. 10 விபண்டகன்: விபாண்டுகன்.

